வருடச் சந்தா போஸ்டேஜ் உள்பட ரூ. 4

[ஸத்க்ரந்தப் ப்ரகாசந ஸபையில் மெம்பர்களாகச் சேர்ந்தவர்கள்
இதற்காகத் தனிச் சந்தா செலுத்தவேண்டா]

# ஸ்ரீராமாநுஜன்.

---

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

— 4 —

என்னைப்புவியி லொருபொரு ளாக்கி * மருள்சுரந்த
முன்னைப்பழவினை வேரறுத்து * ஊழி முதல்வனையே
பன்னப்பணித்த விராமானுசன் பரன் பாதமுமென்
சென்னித்தரிக்க வைத்தான் * எனக்கேதுஞ் சிதைவில்லையே.

மதராஸ்

ஸத்கிரந்த பிரகாசன சபையின் வெளியீடு

கிடைக்குமிடம்: P.B. அண்ணங்கராசாரியர், க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்

# மதராஸ் ஸித்தாந்தப்ரகாசக ஸபாவுக்கு

# ஏஜண்டுகள் தேவை

**கமிஷன் கொடுக்கப்படும்.**

ஷை ஸபைக்கு மெம்பர்களைச் சேர்க்கவும், ஷை ஸபா மூலமாக வெளிவரும் புத்தகங்களை விற்பனை செய்யவும், ஸ்ரீராமானுஜன் பத்திரிகைக்குச் சந்தாதாரர்களைச் சேர்க்கவும் யோக்யதையுள்ள ஏஜண்டுகள் தேவை. அவர்களுக்குக் கீழ்க்கண்ட விதமாகக் கமிஷன் கொடுக்கப்படும்.

1. ஷை ஸபையில் 250 ரூ. செலுத்தும் போஷகர்களைச் சேர்த்தால் நபர் 1-க்கு 10 ரூ. கமிஷன்.

2. 100 ரூ. செலுத்தும் ஜீவியச் சந்தாதாரர்களைச் சேர்த்தால் நபர் 1-க்கு 4 ரூ. கமிஷன்.

3. வருஷச்சந்தா 12 ரூ. செலுத்தும் ஆர்டினரி சந்தாதாரர்களைச் சேர்த்தால் நபர் 1-க்கு ஒரு ரூபாய் கமிஷன்.

4. ஸ்ரீராமானுஜன் பத்திரிகைக்கு மாத்திரம் வருஷச்சந்தா 4 ரூ. செலுத்தும் சந்தாதாரர்களைச் சேர்த்தால் நபர் 1-க்கு 0-8-0 கமிஷன்.

5. ரூ. 50 விலையுள்ள புத்தகங்களை விற்பனை செய்து கொடுத்தால் 10 ரூ. கமிஷன். ரூ. 100 விலையுள்ள புத்தகங்களை விற்பனை செய்து கொடுத்தால் ரூ. 25 கமிஷன்.

6. வெளியூர்களிலுஞ் சென்று ஷை காரியங்களைச் செய்வதானால் பிரயாணச் செலவு முதலியவைகளுக்காகத் தனியாய் 100-க்கு 10 ரூ. வீதம் அதிகப்படி கமிஷன் கொடுக்கப்படும். இந்த கமிஷன் புத்தக விற்பனைகளுக்கு மாத்திரமே. இவ்விதமாக இசையக்கூடிய ஏஜண்டுகள் கீழ்க்கண்ட விலாஸத்திற்குத் தெரிவித்துக்கொண்டால் அவர்கள் பிரசாரம் செய்வதற்கு வேண்டிய விளம்பரம் முதலானவற்றை அவர்களுக்கு அனுப்புவோம். ஸகல விவரங்களும் தபால் மூலமாகவோ நேரிலோ தெரிந்து கொள்வது.

இப்படிக்கு

**காஞ்சீபுரம்.** **P. B. அண்ணங்கராசாரியார்**

10—12—48 தலைவர் மதராஸ் ஸித்தாந்தப்ரகாசக ஸபா.

4

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன்

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

[மதராஸ் ஸித்க்ரந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியார்.

| முதல் தொகுதி | 10–12–1948 | 4-வது பகுதி |
|---|---|---|

## யதிராஜ ஸப்ததியும் எம்பெருமானும்

ஸ்ரீமங்கிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த யதிராஜஸப்ததியில் முதல் ஒன்பதுச்லோகங்கள் குருபரம்பராநுபவத்தில் சென்றன. 1. பெரிய பெருமாள். 2. பெரிய பிராட்டியார். 3. ஸேனை முதலியார். 4. நம்மாழ்வார். 5. ஸ்ரீமந்நாதமுனிகள். 6. உய்யக்கொண்டார். 7. மணக்கால் நம்பி. 8. ஆளவந்தார். 9. பெரியநம்பி. ஆக இப்படி குருபரம்பராநுபவஞ்செய்து தலைக் கட்டியபின் ***ப்ரணமம் லக்ஷ்மணமுநி:*** என்கிறச்லோகம் முதலாக எம்பெருமானாருடைய குணாநுபவத்திலே இறங்கியுள்ளார். மேற்குறித்த ஆரம்பச்லோகத்தில் **லக்ஷ்மணமுநி:** என்று ஸ்வாமியின் திருநாமத்தை வ்யபதேசித்தபடியினால், ஸ்வாமிக்கு அமைந்த **ராமாநுஜர்** என்னும் திருநாமம் தசரதாத்மஜனான ஸ்ரீராமனுடைய தம்பியாகிய இளைய பெருமாளைக் குறிக்கொண்டதாமென்று விளக்கப்பட்டதாயிற்று. ராமாநுஜனென்கிற திருநாமம் "செம்பொற்கழலடிச் செல்வா பலதேவா!" என்னப்பட்ட நம்பிமூத்தபிரானென்னும் பலராமனுடைய தம்பியான கண்ணனையும் சொல்லக்கடவதென்பது முகுந்த மாலையில் ***ஹே ராமாநுஜ ஹே ஜகத்த்ரய குரோ ஹே புண்டரீகாக்ஷ*** என்கிற ஸுப்ரஸித்தமான ச்லோகத்தினால் அனைவருமறிந்ததேயாம். ஆகவே ஸ்வாமிக்கு அமைந்த ராமாநுஜரென்னுந் திருநாமம் கண்ணபிரானைக் குறிக்கொண்டதாகவும் கொள்வதற்கு இடமிருப்பதால் கண்ணபிரானுக்கும் ஸ்ரீராமாநுஜர்க்குமுள்ள ஒற்றுமையை இப்பத்திரிகையின் இரண்டாவது இதழில் நாம் பதினாறு வகையாக விவரித்து நிரூபித்திருக்கின்றோம். அது, சரித்திரப்போக்கில் உள்ளுறைபொருள்வகையென்கிற ஸ்வாபதேசார்த்த முறையில் நிரூபிக்கப்பட்ட ஸாம்யம். வேதாந்த தேசிகன்

யதிராஜ ஸப்ததியில் சப்தச்லேஷ வகையினுல் நிரூபித்தருளின ஸாம்யம் ஈண்டு விவரிக்கப் படுகிறது. அந்தச்லோகம் வருமாறு:—

**"சமிதோதய சங்கராதி கர்வ: ஸ்வபலாத் உத்த்ருதயாதவப்ரகாச:,**
**அவரோபிதவாந் ச்ருதேரபார்த்தாந் நநு ராமாவரஜஸ் ஸ ஏஷ பூய:"**

இந்தச்லோகத்தில் மூன்று வகைகளினுல் கண்ணபிரானுக்கும் எம்பெருமானுர்க்கும் ஸாம்யம் வடமொழி வல்லுநர்க்கு மிகவும் ரஸிக்கக்கூடிய ச்லேஷாலங்கார மரியாதையினுல் [சிலேடையணியில்] அருளிச் செய்யப்பட்டுள்ளது. பல பொருள்படச் சொல்லுவது **ச்லேஷம்** [சிலேடை] எனப்படும். அது அபங்கச்லேஷமென்றும் ஸபங்கச்லேஷமென்றும் இருவகைப்படும். பதங்களை யொடித்துப் பொருள்கொள்ளவேண்டாமல் நாநார்த்த பதங்களையிட்டுப் பல பொருள்களைப் பெறுவிப்பதானது அபங்கச்லேஷமெனப்படும். அப்படியல்லாமல் பதங்களை யொடித்துப் பல பொருள் கொள்ளுமாறு பிரயோகஞ் செய்வதானது ஸபங்கச்லேஷ மெனப்படும். இப்போது நாமெடுத்துக்கொண்ட ***சமிதோதய*** என்னும் யதிராஜ ஸப்ததிச்லோக ரத்நத்தில் முதலிரண்டு பாதங்களில் அபங்கச்லேஷம்; மூன்ருவது பாதத்தில் மாத்திரம் ஸபங்கச்லேஷம்

இனிச்லோகத்தின் கருத்து விவரிக்கப்படுகிறது;

### [1. சமிதோதய சங்கராதி கர்வ:]

இது கண்ணனுக்கும் உடையவர்க்கும் பொதுவான விசேஷணம். சங்கரன் முதலானுருடைய செருக்கையடக்கினவர் என்பது பொருள். கண்ணபிரான்பரமாகப் பொருள் கொள்ளும்போது சங்கரன் என்பதற்குச் சிவபிரானென்று அர்த்தம். ஆதி பதத்தினுல் அப்பிரானைச் சேர்ந்த கார்த்திகையான் கரிமுகத்தான் முதலானுரை [ஸுப்ரஹ்மண்ய விநாயகாதிகளை]க்கொள்வது. கண்ணபிரான் பாணுஸுர யுத்தத்தில் சங்கரன் முதலானுருடைய செருக்கையடக்கினது இதிஹாஸ புராணப்ரஸித்தம். உடையவர்* சங்கர பாக்கர யாதவபாட்ட ப்ரபாகரர் தங்கள் மதஞ் சாய்வுற* என்றும் ***கா சங்கா சங்கராதே:*** என்றும் சொல்லுகிறபடியே சங்கரகுருப்ரப் ருதிகளான புறமதத்தவர்களின் செருக்கைப் போக்கினவர் என்பது சரித்ரப்ரஸித்தம். ஆகவே இந்த விசேஷணம் கண்ணனுக்கும் உடையவர்க்கும் ஸாம்யத்தை நிரூபித்ததாயிற்று.

கண்ணபிரான் சங்கராதிகளின் செருக்கையடக்கின வரலாறு இங்குச் சுருங்க எழுதப்படுகின்றது. பலிசக்ரவர்த்தியின் ஸந்ததியிற் பிறந்த பாணுஸுரனென்பான் ஒரு கால் நடராஜனுன சிவபெருமானுடைய நடனத்திற்குப் பொருத்தமாகத் தாளம் போட்டனன்; அதனுல் மிக்க மகிழ்ச்சிகொண்ட சிவபெருமான் அந்த ஸந்தோஷாதி சயத்தினுல் அந்த பாணுஸுரனுக்கு ஆயிரங் கைகளை வரப்பிரசாதமாகத் தந்து தானும் தன் பரிவாரங்களும் அவனது பட்டணத்தைக் காவல் செய்து கொண்டிருக்கும் படியான அநுக்ரஹமுஞ் செய்தருளினன். அந்த பாணுஸுரனுக்கு உஷையென்று ஒரு மகளிருந்தாள். அவள் ஒரு நாள் ஒரு பரமஸுந்தரனை புருஷனுேடு தான் கூடியிருந்ததாகக் கனுக் கண்டு

தன் உயிர்த்தோழியான சித்திரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்தாள். அவள் உலகிலுள்ள பல ஸுந்தர புருஷர்களின் வடிவங்களைச் சித்திரத்தில் எழுதிக் காட்ட, கிருஷ்ணனுடைய பௌத்திரனும் ப்ரத்யும்நனது புத்திரனுமாகிய அநிருத்தனே தன்னோடு கூடியிருந்தனனாக உஷை சுட்டிக்காட்டி அவனைப் பெறுவதற்கு உபாயஞ் செய்யவேண்டுமென்று அத்தோழியை வேண்டினள். அவள் தன் யோகவித்தை மஹிமையினல் த்வாரகைக்குச் சென்று அநிருத்தனைத் தூக்கிக் கொண்டு வந்து அந்தப்புரத்திலே விட, உஷை அவனோடு போகங்களை யநுபவித்து வந்தாள். இச்செய்தியைக் காவலாளராலறிந்த அந்தப் பாணன் தன்சேனையுடன் அநிருத்தனை யெதிர்த்து மாயையினல் பொருது நாகாஸ்திரத்தினல் கட்டிப்போட்டிருந்தான். த்வாரகையிலே அநிருத்தனைக் காணமல் யாதவர்களெல்லாருங் கலங்கியிருந்தபோது, நாரத முனிவனல் செய்தியுணரப்பெற்ற ஸ்ரீ கிருஷ்ண பகவான் கருடாரூடனய் பலராமன் முதலானரோடு கூட பாணபுரமாகிய சோணிதபுரத்திற்கெழுந்தருளும்போதே அங்கு அருகில் காவல் காத்துக்கொண்டிருந்த சிவபிரானது பிரமத கணங்கள் எதிர்த்துவர, அவர்களை யெல்லாமழித்து பின்பு சிவபெருமானலேவப்பட்டதொரு ஜ்வரதேவதை மூன்று கால்களும் மூன்று தலைகளுமுள்ளதாய் வந்து பாணனைக் காப்பாற்றும் பொருட்டுப் போர்புரிய, அதனையும் துரத்தி, பாணஸுரனது கோட்டையைச் சூழ்ந்துகொண்டு காத்திருந்த சிவபிரானது அநுசரர்களான அக்நிதேவர்கள் ஐவரையும் நாசஞ்செய்து, பாணசுரனோடு போர்செய்யத் தொடங்குகையில், அவனுக்குப் பக்கபலமாகச் சிவபெருமானும் ஸுப்ரஹ்மண்யன் முதலான பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப் போராட, கண்ணன் தான் ஜ்ரும்பணஸ்த்ரத்தைப் பிரயோகித்துச் சிவன் ஒன்றுஞ் செய்யமாட்டாமல் கொட்டாவி விட்டுக்கொண்டு சோர்வடைந்து போம்படி செய்து, ஸுப்ரஹ்மண்யனையும் கணபதியையும் உங்காரங்களால் ஒறுத்து ஓட்டி, பின்னர் சக்ராயுதத்தை யெடுத்துப் பிரயோகித்து அப்பாணனது ஆயிரந்தோள்களையும் தாரை தாரையாய் உதிர மொழுக அறுத்து அவனுயிரையும் சிதைப்பதாக விருக்கையில், பரமசிவன் அருகில் வந்து வணங்கிப் பலவாறு பிரார்த்தித்ததனல் சிவபஜனஞ் செய்தார்க்குப் பலன் கைமேலே கண்டதாக இருக்கட்டுமென்றெண்ணிய கண்ணபிரான் நான்கு கைகளோடும் உயிரோடும் விட்டருளினன்-என்பதாம்.

எம்பெருமானர் சங்கராதி கர்வசமநம் பண்ணினது ஸ்ரீ பாஷ்யாதிக்ரந்த ரசனையினலும் அத்வைதிப்ரப்ருதிகளை வாதப்போரில் வென்று ஆட்படுத்திக்கொண்டதனலுமென்றுணர்க. இவ்விஷயம் மேலே மூன்ருவது பாதத்தின் விவரணத்திலும் விளங்கும்.

## [2. ஸ்வபலாத் உத்த்ருதயாதவப்ரகாச:]

கண்ணபிரான்பரமான அர்த்தத்தில்-யாதவர்களின் பிரகாசம் யயாதி சாபத்தினல் மங்கிக் கிடக்கையில், **“கோபாலோ யாதவம் வம்சம் மக்நமப்யுத்தரிஷ்யதி”** என்கிறபடியே அந்தப்ரகாசத்தைத் தனது வலிமையினல் நபுருத்தாரம் செய்தவன் என்று கொள்ளக் கடவது. யதுகுலத்திலே பிறந்து யாதவர்களை விளக்கமுறச் செய்தருளினவன் கண்ணபிரான் என்க. உடையவர்பரமான அர்த்தத்தில் ‘யாதவப்ரகாச’ என்று முழுச்

சொல்லாகக்கொண்டு, அப்பெயர்பூண்ட மாயாவாதி குருவைத் தம்முடைய க்ருபாபலத்தினால் உத்தரிப்பித்தவர் என்று கொள்க. முதலில் தமக்கு உபாத்யாயராயிருந்த யாதவ ப்ரகாசரையும் தமக்கு அடிமைப்படுத்திக்கொள்ளும்படியான ப்ரபாவமுடையவர் எம்பெருமானார் என்க. இவ்வரலாறு உடையவர் சரிதையில் விரிவாகக் காணத்தக்கது.

### [3. அவரோபிதவாந் ச்ருதே: அபார்த்தாந்]

'அபார்த்தாந் ச்ருதே: அவரோபிதவாந்' என்று அந்வயம். இதில் ஸபங்கச் ச்லேஷமுள்ளது. **அபார்த்தாந்** என்னும் பதம், (அ-பார்த்தாந்) என்றும் (அப-அர்த்தாந்) என்றும் பிரியும். பார்த்தனென்று அர்ஜுநனைச் சொல்லி, பார்த்தனல்லாத [அர்ஜுந விரோதிகளான] துர்யோதநாதிகளை அபார்த்தர்களென்று சொல்லுவதாகக் கண்ணன்பரமான அர்த்தத்தில் கொள்ளவேண்டும். **ச்ருதி** யென்று கீர்த்திக்கும் பெயர், வேதத்திற்கும் பெயர். கண்ணபிரான் அபார்த்தர்களான துர்யோதநாதிகளைக் கீர்த்தியிலிருந்து கீழே யிறக்கிவிட்டான்; பாண்டவ பக்ஷபாதியாயிருந்து *மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழியச்செய்து அவர்களைக் கீர்த்தியிழந்தவர்களாகச் செய்தானென்றபடி. ஸ்வாமி ராமாநுஜரோவென்னில்; [**ச்ருதே: அபார்த்தாந் அவரோபிதவாந்**] இதர மதஸ்தர்கள் வேதங்களுக்குச் செய்த அபார்த்தங்களை ஸமீசீநார்த்த ப்ரதர்சநத்தினால் நிரஸித்தருளினவர்: ஆனதுபற்றியே ***ஸமிதோதய சங்கராதி கர்வராக** முதல் பாதத்தில் கூறப்பட்டாரென்றுணர்க.

இனி, ச்ருதியின் அபார்த்தங்களை எம்பெருமானார் நிரஸித்தருளினவிதம் விவரிக்கப்படவேண்டும். அது அடுத்த இதழில்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

---

## சென்னை ஸத்க்ரந்தப்ரகாசந ஸபை அறிக்கை.

ஷை ஸபை 1947-ம் வரு அக்டோபர் மாதத்தில் ஸ்தாபிக்கப்பட்டு இதன் மூலமாக ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயக்ரந்தங்கள் பலவும் அருமையாக வெளிவந்து கொண்டிருக்கின்றன. ஸ்ரீ ராமாநுஜன் என்னும் மாதப்பத்திரிகையும் இச்சபையின் மூலமாகவே வெளிவருவது. விவரமறிய விரும்புமவர்கள் க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம் என்ற விலாஸத்திற்கு எழுதுக.

## முக்கிய அறிவிப்பு

இப்பத்திரிகையின் எடிடர் ஸ்ரீ P. B. அண்ணங்கராசாரிய ஸ்வாமிகள் 14-12-48-ந் தேதிமுதல் 13-1-'49-ந் தேதிவரை (மார்கழி மாதம் முடிய) மதராஸிலேயே வஸிப்பார். கடிதங்கள் அடியிற்கண்ட விலாஸப்படி எழுதுக.

**P. B. அண்ணங்கராசாரியர்,**
49, கோவிந்தப்பநாயகன் தெரு,
(உப்பட்டூர் ஆழ்வார்செட்டி சாரிடி)
**ஜி. டி. மதராஸ் 1**

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயண — பாலகாண்டத்தில்

பதினெட்டாவது ஸர்க்கத்தினிடையிலிருந்து முப்பதாவது ஸர்க்கம் முடியுமளவுமுள்ள கதைப்பகுதி.

## விச்வாமித்ர யாக ஸம்ரக்ஷண கெட்டம். (2)

[விச்வாமித்திரர் வருதலும் தயரதன் உபசரித்தலும்.]

இங்ஙனே நான்கு புதல்வர்களுடனும் கூடிக்களித்து வாழாநின்ற தசரத மன்னவன் அவர்களுடைய திருமணத்தைப்பற்றிப் புரோகிதருடனும் பந்துக்களுடனும் கூடி ஆலோசித்துக் கொண்டிருக்கையில், விசுவாமித்ரமாமுனிவர் அவ்வரசனைக் காணக் கருதி அவ்விடம் வந்தனர். அம்மாமுனிவரைக் கண்டு மகிழ்ந்த மன்னவன் அவருக்கு வஸிஷ்டமா முனியால் அர்க்கியம் கொடுப்பித்து அமரச்செய்தனன். அவ்விசுவாமித்ர மாமுனியும் களிப்படைந்து அரசனையும் வஸிஷ்டவாமதேவாதி ரிஷிகளையும் க்ஷேமம் விசாரித்தனர்.

பின்பு மன்னவன், "மாமுனிவரே! [புதல்வர்களின் விவாஹத்தைக் குறித்து நான் ஆலோசித்துக்கொண்டிருக்கையில்] நீர் தற்செயலாய் வந்தீர். இதனால் நான் அடையும் ஆனந்தம் அளவற்றது. ஐயனே! நான் உமக்குச் செய்யவேண்டுவதென்? எனது தானத்திற்கு நீரே தகுந்த பாத்திரமாயிருக்கின்றீர். எனது ஜன்மம் இப்போதுதான் பயன் பெற்றது. நீர் முதலில் ராஜரிஷியாய் விளங்கிப் பின்பு தவஞ்செய்து பிரம ரிஷியானீர். நீர் எனக்கு மிகவும் பூஜிக்கத் தக்கவர். நீர் வந்து எனக்குக் காட்சி யளித்தமையால் நானிருக்குமிவ்விடம் புனிதமாயிற்று. நீர் எந்தப் பயனைக் குறித்து இங்கே வந்தீரோ, அதை மொழிந்தீராயின் அதை உமது அனுக்கிரகத்தினால் நிறைவேற்ற விரும்புவேன். உமது கட்டளையை நான் செய்வேனோ மாட்டேனோ வென்று நீர் ஐயப்படவேண்டாம்" என்றனன்.

[விச்வாமித்ரர் இராமனை வேண்ட, தசரதன் மூர்ச்சித்தல்.]

இங்ஙனம் செவிக்கினிய வாக்யங்களைக் கேட்டு, விசுவாமித்ர முனிவரும் மிக்க ஆனந்தமடைந்து, மன்னவனை நோக்கி 'ஓ தரணியாளனே! உயர்ந்த சூரிய குலத்திற் பிறந்து வஸிஷ்டரைப் போன்றவர்களுடைய உபதேசம் பெற்று, அவருடன் குலாவும்படியான பெரும்பேறு உன்னைப் போன்றவனுக்கே தகுமத்தனையன்றி மற்றொருவனுக்கும் தகாது. நான் உனக்குச் சொல்லவேண்டுமென்று நெஞ்சில் நினைத்திருக்கிற காரியமொன்றுண்டு. அதை நீ செய்ய இசையவேண்டும். நீ சொன்ன சொல் தவறாதிருக்கவேண்டும். நான் ஒரு பயனை உத்தேசித்து அதன்பொருட்டு யாகஞ்செய்யத் தொடங்கி தீக்ஷையிலிருக்கின்றேன். அதற்குக் காமரூபிகளாகிய ராக்ஷஸர்களிருவர் மிக்க இடையூறு செய்கின்றனர். எனது விரதம் வெகுவாய் நடந்தேறி முடியவேண்டிய தருணத்தி லிருக்கின்றது. ஆனால் அதைக் கெடுக்க ஸுபாஹு மாரீசர்களென்கிற ராக்ஷஸர்களிருவரும் மாம்ஸங்களையும் ரத்த வெள்ளத்தையும் கொண்டுவந்து அந்த யாகவேதிக்கு நாற்புறத்திலும் பொழிகின்றனர். அதனால் மிக வருத்தங்கொண்டு அங்கிருந்து வந்துவிட்டேன். அரசனே!

---

**ஓர் குறிப்பு** :—மேலே வான்மீகிராமாயணப் பகுதியும் கீழே கம்பராமாயணப் பகுதியுமாக அச்சிடுவதில் சில அஸௌகரியங்கள் தோன்றினபடியாலும், அந்த ரீதியைப் பல அன்பர்களும் விரும்பாதபடியாலும் அந்த ரீதியைவிட்டு ஒவ்வொரு கெட்டத்திலும் வான்மீகப்பகுதியை முன்னே பதிப்பித்துப் பின்னே கம்பர்பகுதியைப் பதிப்பிக்கும்முறை இது முதலாகக் கொள்ளப்பட்டது.

அவர்களை ஏன் சபிக்கக்கூடாதென்றால், யாகஞ்செய்யும் அத்தருணத்தில் கோபங் கொள்ளலாகாதென்பது உனக்குத்தெரியாததல்ல. ஆகவே, இப்போது நீ செய்யவேண்டுவதாவது உனது மூத்த குமாரனாகிய ராமனை என்னுடன் அவசியமனுப்ப வேண்டும். அவன் சிறு பிள்ளையாகையால் அவர்களை யெப்படி வெல்லமுடியுமென்று எண்ணவேண்டாம். இவன் தனது சிறந்த பராக்கிரமத்தினால் யாகத்திற்கு இடையூறுசெய்யும் அரக்கர்களனைவரையும் வேரோடு நாசஞ் செய்யவல்லவன். மேலும் நான் அவனுக்குப் பலவகை நன்மைகளையும் செய்வேன். அம்மாரீச ஸுபாஹுக்கள் ராமனுக்கு முன்னே நின்று போர் செய்யச் சிறிதும் வல்லவரல்லர். ராமனையொழிய மற்றொருவன் எவனாயினும் அவர்களை வெல்ல முடியாது. மன்னவர் மணியே! ராமனிடத்தில் பிள்ளையென்னும் ப்ரீதி பாராட்டி எனது விருப்பத்தைத் தடைசெய்ய வொண்ணாது. நான் சொல்லுமிச் சொல்லை நம்பவேண்டும். அவன் தக்க வல்லமையுடையன் என நான் உனக்கு உறுதியாகச் சொல்லுகிறேன். ராமன் மஹாத்மா வென்றும், உண்மையான பராக்ரமமுடைய னென்றும் யான் அறிவேன்! யானேயன்றி, மஹானுபாவராகிய வஸிஷ்டரும் அறிவர். தவத்தில் நிலைநின்ற மற்றுமுள்ள இம்முனிவர்களும் அறிவார்கள். அரசர்க்கரசே! ஆயிரஞ் சொல்லியென்? இப்பூமியில் மேன்மேலும் தருமத்தின் விருத்தியும் சிறந்த கீர்த்தியும் நிலைநிற்கவேண்டுமென்று விரும்பினையாகில், ராமனை எனக்குக் கொடுக்கவேண்டும். அவனது உதவி எனக்குப் பததுநாள் வரையிலுமே வேண்டும். அதனால் உனக்கு மிகுந்த க்ஷேமமும் புகழும் உண்டாகும். மனத்தில் கொஞ்சமும் யோசனையும் சோகமும் வேண்டாம்" என்று மொழிந்தனர். அதைக் கேட்ட அரசன் கலங்கி மிக்க மனவருத்தமுற்று ஸிம்ஹாஸனத்தினின்று நடுங்கி வீழ்ந்து மூர்ச்சித்தனன்.

[தசரதன் ஸங்கடமான மொழிகளை முனிவனிடம்கூறி ஒன்று வினவுதல்.]

சில நாழிகை கழிந்தபின் தெளிந்த அரசன், "முனிவரே! தாமரை யிதழ்போல் விளங்கும் அழகான கண்களையுடைய ராமனுக்குப் பதினாறு பிராயமும் நிரம்பவில்லையே. (இப்பொழுது பன்னிரண்டாவது பிராயம் நடக்கின்றது.) இங்ஙனம் இளைஞனாகிய இவனுக்குப் போர் செய்யும் வல்லமையுண்டோ? எனது மடியை விடாதிருக்குமிவன் என்னை விட்டிருக்க வல்லவனல்லன். இவ்வயதில் விளையாடிக்கொண்டிருக்க வேண்டியவனன்றி யுத்தஞ் செய்யத் திறமையுடையவனல்லன். மனிதரோடேயே போராடமாட்டாத இவன் கொடிய அரக்கர்களோடு போராட வல்லவனோ? ஆகிலும், யான் சொன்னசொல்லுக்கு வேறாகச் செய்யேன். இதோ எனது கட்டளைக்கு அடங்கிய படைகள் கோடிக் கணக்கிலிருக்கின்றன; இவைகளைக் கூட்டிக்கொண்டுவந்து நான் அவ்வரக்கர்களோடு போர் செய்கின்றேன். அவ்வரக்கர்களிருவரேயன்றி மேலும் மேலும் கோடிக்கணக்காக அரக்கர் வரினும் அவர்களோடும் போர் புரிந்து அக்கூட்டத்தையே கருவோடு அழித்துவிடக் காத்துக்கொண்டிருக்கின்றனம். ஆகையால் ராமனை யழைத்துக்கொண்டு போகவேண்டாம். நானே வில்லுங் கையுமாய் நின்று இப்படைகளோடு கூடியிருந்து எனது உடலில் உயிருள்ளவளவும் அவ்வரக்கர்களோடு போராடுவேன்; ராக்ஷஸர்களோ வஞ்சனைகொண்டு யுத்தஞ் செய்ய வல்லமை பெற்றவர்கள். அன்னவர்களோடு போர் புரிய இப்பாலகன் சிறிதும் பொருத்தமற்றவன் என்பதை யான் சொல்ல வேண்டுமோ? அன்றியும், மாமுனிவரே! எனது உள்ள நிலையைக் கேட்டருளவேண்டும். ஐயனே! ராமனை விட்டு ஒரு முகூர்த்த காலமும் பிழைத்திருக்கமாட்டேன். தேவரீர் ராமனையழைத்துக்கொண்டுபோவது எனது உயிரை உடலினின்றும் பிரிப்பது போலாகும். ரகு குலத்தில் விளக்குப்போல் விளங்கும் எனது ஆருயி

ரான ராமனையே அழைத்துக்கொண்டு போகவேண்டுமென்று தேவரீருக்குத் திருவுள்ளமாயின் நால்வகைச் சேனையுடன் கூடிய என்னையுமவனுடன் அழைத்துச் செல்வீராக.

தவமாமுனிவரே! யான் பிறந்து அறுபதினாயிரம் ஆண்டுகள் சென்றபின்பு எவ்வளவோ விரதங்களை யனுஷ்டித்து மிகவும் சிரமப்பட்டு இந்த ராமனை அருமையாகப் பெற்றேன். அதை நினைத்தாயினும், தேவரீர் இவனை அழைத்துக்கொண்டு போக எண்ணியதை மாற்றியருள வேண்டும். மேலும் எனது புதல்வர்கள் நால்வரினும் எனக்கு ராமனிடத்திலேயே நிறைந்த அன்பு. அவனை அழைத்துக்கொண்டு போவது எவ்வகையினும் பொருத்தமானதல்ல. அன்றியும் உமது யாகத்தைக் கெடுக்கின்ற அவ்வரக்கர்களது வல்லமை முதலானவற்றையும் எனக்குச் சொல்லவேண்டும்" என்றனன்.

[முனிவர் அரக்கர்களைப்பற்றிக் கூறும் மறுமொழி.]

இதைக் கேட்ட விசுவாமித்திரர் 'அரசனே! புலஸ்திய முனியின் குலத்தில் பிறந்த ராவணனென்பவன் பிரமனிடம் வரம்பெற்று மிகுந்த பலமும் சிறந்த வீரியமும் அமைந்து அநேக ராக்ஷஸர்களுடன் மூவுலகங்களையும் அளவின்றி வருத்துகின்றனன். அவன் குபேரனுக்கு நேரே பின்பிறந்தவன்; விச்ரவஸ்ஸென்னும் முனிவருடைய புதல்வன்; ராக்ஷஸர்க்கெல்லாம் அதிபதி; நீயும் அவனைக் கேட்டிருக்கலாம். அப்பெருமிடுக்கன் தானே நேராக வந்து யாகத்திற்கு இடையூறு செய்ய நேராத காலங்களில் மாரீச ஸுபாஹுக்களென்னும் ராக்ஷஸர்களிருவரையும் தூண்டி விடுகின்றனன். அவர்கள் வந்து யாகத்தைக் கெடுக்கின்றனர்' என்று மொழிந்தனர்.

[இராமனையனுப்ப முடியாமையைத் தசரதன் பணிந்து கூறுதல்.]

தசரதன் 'மாமுனிவரே! அப்படிக் கொடுந் தன்மையனாகிய ராவணனோடு யுத்தத்தில் முன்னின்று போர்புரிய நானும் வல்லவனல்லேன். உமது ஆணைப்படி அக்காரியஞ் செய்யப் பாக்கியமற்றிருக்கிற என்மீது கிருபை செய்தருளவேண்டும். தேவதானவர்கள் கந்தருவர்கள் யக்ஷர்கள் பந்நகர்கள் என்னுமிவர்களே ராவணனோடு முன்னின்று போர்புரிய வல்லமையற்றிருக்கிறார்கள் என்றால், மானிடர்கள் எவ்வளவினர்? அவனது ஸைந்யங்களோடும் என்னால் சண்டை செய்ய முடியாது. எனது புதல்வன் உமது கொள்கையின்படி தேவர்களை நிகர்த்தவனாயிருந்தாலும் அவனை உம்முடன் அனுப்ப என் மனமிசையவில்லையே. உமது யாகத்தைக் கெடுக்கவரும் மாரீச ஸுபாஹுக்களோ மிகவும் பயங்கரரா யிருப்பார்கள். அவர்களோடு யுத்தஞ் செய்து யாகத்தைக் காக்க எனது குழந்தையாகிய ராமனை எவ்வாறு தேவரீருடன் அனுப்ப மனங்கொள்ளுவேன். மாரீச ஸுபாஹுக்கள் இருவரும் மிக்க வல்லமைபெற்று யுத்தத்தில் நன்றாகப் பயின்றவர்கள். நானும் எனது நண்பர்களும் படைகளும் ஒன்றாய்க் கூட்டங்கூடி எதிர்த்தாலும் அவ்விருவரில் ஒருவனோடாயினும் முன்னின்று போர்புரிய இயலாதல்லவா; க்ஷமித்தருள வேண்டும்' என உரைத்தனன்.

[விச்வாமித்ர முனிவரது சீற்றக் கூற்று.]

இங்ஙனம் அரசன் சொன்ன சொற்களைக்கேட்டு விசுவாமித்திர மாமுனிவர் அளவற்ற கோபங்கொண்டு 'அரசனே! யான் விரும்பியது செய்வதாக முன்பு நீ உறுதிமொழி கொடுத்து, அதை நிறைவேற்றாது விட்டுவிட நினைக்கின்றனை. சிறந்த வம்சத்தில்பிறந்து சொன்னசொல் தவறுவது பொருத்தமன்று. மன்னவனே! இப்படிச் சொன்னசொல் தவறுவது உனக்குள் அழகென்று தோன்றுமாயின் சொல்லிவிடு. நான் வந்தவழியே திரும்பிப்போகின்றேன். நற்குலத்திற் பிறந்தவனை நீ வந்தவர்கட்கெல்லாம் இப்படியே

ப்ரதிஜ்ஞை செய்து பொய்யைப் பேசிக்கொண்டு நன்ருக வாழ்ந்திரு' என்று படபடத்துக் கூறினர். இங்ஙனம் அளவற்ற கோபாவேசங் கொள்ளும்போது, பூமியெல்லாம் கிடுகிடு வென்று நடுங்கிற்று. 'இம்மாமுனிவர் என்ன செய்வரோ?' என்று தேவர்களும் அஞ்சினர்.

[வஸிஷ்டருடைய ஹிதோபதேசத்தினல் தசரதன் புதல்வர்களை யனுப்புதல்.]

உலகமெல்லாம் இப்படி அஞ்சி நடுங்குவதைக் கண்ட வசிட்டமாமுனிவர் அரசனைநோக்கி, 'மஹாராஜனே! சொன்னசொல் தவருத இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்தவனுயிருந்து தருமத்தைத் தவறுவது யுக்தமன்று. சொன்னசொல் தவருதிருப்பது உன் குலத்திற்கே உரிய தருமம். அதை நீ அநுஷ்டிப்பாயாக. நீ அதர்மத்தை ஏறிட்டுக் கொள்ளலாகாது. ஒப்புக்கொண்டபடி செய்யாதவன், தான் முன்செய்த பலவகை யாகங் களையும் தருமங்களையும் பயனற்றவைகளாகச் செய்து கொள்வான். ஆகையால் ராமனை அனுப்பிவிடு. ராமன் வில்வித்தையைக் கற்றிருந்தாலென்ன? கல்லாதிருந்தாலென்ன? இம்முனிவர் அவனைப் பாதுகாத்துக் கொண்டிருக்கையில் அரக்கர்கள் அவனுக்கொரு கெடுதலும் விளைக்கமாட்டார்கள். இவர் தருமமே வடிவங்கொண்டாற் போலிருப்பவர். மூவுலகத்தி லும் வீரியம் படைத்தவர்களில் இவர் மிகச்சிறந்தவர்; தவங்களுக்கெல்லாம இவர் இருப்பிடம். இம்மூவுலகங்களிலுமுள்ள பலவகைப்பட்ட வில்வித்தைகளை யெல்லாம் இவர் அறிந்தவர். இவ ரறிந்த அஸ்திரங்களை இதுவரையிலும் எவரும் தெரிந்துகொள்ளவில்லை. அஸ்திரங்கள் எல்லாம் மஹாதார்மிகராகிய க்ருசாச்வருடைய புத்திரர்கள். முன்பு இக்கௌசிகர் அரசாளுங் காலத்தில் இவருக்கு க்ருசாச்வர் அவ்வஸ்திரங்களையெல்லாந் தந்தனர். தக்ஷப்ரஜாபதிக்கு ஜயையென்றும், ஸுப்ரபை யென்றும் பெண்கள் இருவருண்டு. அவ்விருவரும் க்ருசாச் வரை மணந்து அஸ்திரங்களையும் சஸ்திரங்களையும் பிள்ளைகளாகப் பெற்றனர். அவர்களில் முதற்பெண்ணுகிய ஜயையென்பவள் அஸுரப்படைகளை வதைக்கும் பொருட்டு ஐம்பது புதல்வர்களைப் பெற்றனள். பின்பு ஸுப்ரபையும் ஸம்ஹாரங்களென்று பெயர்பெற்ற ஐம்பது புதல்வர்களைத் தானும் படைத்தனள். அவ்வஸ்திரங்களை யெல்லாம் குறையின்றி இவர் அறிவர். அன்றியும், இம்முனிவர் இதுவரையில் கேட்டறியாத மற்றும் புதியவைகளான அஸ் திரங்களையும் அளவின்றி யுண்டுபண்ண வல்லமை யுள்ளவர். ஆதலால் மன்னவனே! ராமனை அனுப்ப நீ சிறிதும் ஐயுறவேண்டியதில்லை. அவ்வரக்கர்களனைவரையும் இவ் விசுவாமித்திரர் ஒருவரே முடிக்கவல்லவர். ஆயினும் உனது புதல்வனுக்கு நன்மை பயக்கும்பொருட்டு உன்னிடம் வந்து இப்படிக் கேட்டுக் கொள்ளுகின்றனர்' என்று கூறினர். இங்ஙனம் வஸிஷ்டமா முனிவர் சொன்ன சொற்களைக் கேட்டுத் தசரத மன்னவன் மனக்கலக்கந் தீர்ந்து தெளிந்து ராமனையும் லக்ஷ்மணனையும் வரவழைத்து மங்களாசாஸன பூர்வகமாக விசுவாமித்திரருக்குத் தந்தனன்.

[விச்வாமித்திரர் ராமலக்ஷ்மணர்களை யழைத்துக் கொண்டு போதல்.]

பின்பு விசுவாமித்திரருடன் ராமன் புறப்படும்போது தேவர்கள் துந்துபி வாத்திய முழக்கத்துடன் மலர்மழை பொழிந்தனர். விசுவாமித்திரர் முன்னே நடந்தார். அவர் பின்னே ராமன் வில்லும் கையுமாகத் தொடர்ந்தனன். லக்ஷ்மணனும் வில்லைக் கையிற் கொண்டு ராமன்பின்னே சென்றனன். இருவரோடும் முனிவர் ஒன்றரையோஜனை தூரம் நடந்து ஸரயூ நதியின் தென்கரைக்குப் போய்ச்சேர்ந்தனர்.

[விச்வாமித்ரர் தாசரதிகளுக்கு மந்த்ர வித்யோபதேசம் செய்தல்.]

அப்பொழுது விசுவாமித்திரர், 'ராமா' என்று இனிய சொல்லுடன் அழைத்து, 'குழந்தாய்! ஜலத்தை யெடுத்து ஆசமனம் செய்; பல மந்திரங்கள் நிறைந்த பலையென்றும்

அதிபலை யென்றும் இரண்டு வி யைகளை உனக்கு உபதேசிக்கிறேன்; அவ்விரண்டு மந்திரங்களையும் நீ ஜபித்துக்கொண் டிருப்பாயாயின் பாஹுபலத்தில் உனக்கு ஒருவனும் இப்பூமியில் ஒப்பானவன் அகப்படான்; எக்குணத்திலும் உனக்கு நிகரானவன் மூவுலகத்திலும் இரான். இவை பிரமதேவனால் படைக்கப்பட்டவை; இப்படிப்பட்ட மந்திரங்களையடைவதற்கு நீயே தகுந்தவன். இவைகளை உபதேசம் பெற்றாயாயின் இவை உனக்கு வெகு பலங்களைக்கொடுக்கும்; நீயும் இவ்வுலகத்தில் பலருக்கும் உபதேசித்துப் பரவச் செய்வாய்' என்று கூற, ராமனும் ஆசமனஞ்செய்து பரிசுத்தனாகி, மஹரிஷியினிடமிருந்து அவ் வித்தைகளிரண்டையும் பெற்றுக்கொண்டு, பின்பு குரு பூஜையையும் நன்கு நடத்தினன். அப்பால் மூவரும் அவ் விரவை ஸரயூ நதிக் கரையில் மிக்க ஆனந்தத்துடன் கழித்தனர்.

[முனிவர் அங்கதேச விருத்தாந்தங் கூறுதல்.]

பொழுது விடியும்போது அம்முனிவரால் எழுப்பப்பட்ட ராஜ குமாரர்களிருவரும் எழுந்திருந்து தினக் கடமை யாவும் செய்து முடித்து, அங்கிருந்து அம்முனிவர் புறப்படுவதை நிரீக்ஷித்துக்கொண்டிருந்தனர். பின் மூவருமாய்ப் புறப்பட்டு ஸரயூ நதி வந்து சேருமிடத்தில் அழகான கங்கா நதியைக் கண்டனர். அங்கு ரிஷிகளின் ஆச்ரமங்கள் அமைந்திருக்குமோரிடத்தைக் கண்டு விசுவாமித்திரரைப் பார்த்து "ஐயனே! அழகான இப் பர்ணசாலை யாருடையது? இதில் குடியிருப்பவர் யாவர்?" என்று தாசரதிகள் கேட்க, முனிவர், "குழந்தைகளே! காமனென்னும் மன்மதன் முன்பு கண்ணுக்குப் புலப்படும்படி உருவத்துடன் இருந்தனன். பார்வதியை சிவன் மணம்புரியும்படி செய்ய வேண்டுமென்று தேவர்கள் அம் மன்மதனைக் கேட்டுக்கொண்டனர். அக் காமன், இவ் வாச்ரமத்தில் மிக்க நியமத்துடன் மன ஊக்கங் கொண்டு தவஞ் செய்யும் சிவபெருமானுக்குக் காதலை விளைவிக்கும் பொருட்டுப் புஷ்ப பாணங்களை ஏவினன். மலர்க் கணைபட்ட அம் மஹானுபாவர் நெற்றிக் கண்ணைத் திறந்து நோக்கி 'ஹூம்' என்ன, நீறாகியொழிந்த மன்மதன் அங்க மற்றவனாகி அதனால் அனங்கனென்று பெயர் பெற்றனன். அம் மன்மதன் எவ்விடத்தில் அங்கத்தை இழக்கப்பெற்றானோ, அத்தேசம் இன்னும் அங்க தேசமென்று வழங்கிவருகின்றது. இங்கிருக்கும் இம்முனிவர்கள் அக்காலந் தொடங்கி வம்ச பரம்பரையாக அச் சிவபெருமானுடைய சிஷ்யர்களாய் இருக்கின்றனர். இன்றிரவு இந்த அங்கதேசத்தில் இப் புண்ணிய நதிகளினிடையில் வசித்திருந்து நாளையதினம் நாம் கங்கையைக் கடந்து போகலாம்" என்று சொல்லிக்கொண்டிருந்தனர்.

அப்போது அங்குள்ள ரிஷிகள் யாவரும் மிக மகிழ்ந்து விசுவாமித்திரருக்கும் ராமலக்ஷ்மணர்களுக்கும் அதிதி பூஜையை நடத்தினர். பின் யாவரும் பலபல புண்ணிய கதைகளைச் சொல்லிக்கொண்டே அன்றிராப் பொழுதைப் போக்கினர்.

[முனிவர் மலத கரூச தேசங்கள் கூறித் தாடகையைப்பற்றி விரிவாகக் கூறுதல்.]

பொழுது விடிந்ததும் ராம லக்ஷ்மணர்களிருவரும் நித்ய கருமங்களைச் செய்து முடித்து, மூவரும் கங்கா நதியின் கரைக்கு வந்து சேர்ந்தனர். அங்கு ஆச்ரமத்திலுள்ள முனிவர்கள் அனைவரும் ஒரு ஓடத்தை அருகில் கொண்டுவந்து நிறுத்த அம்மூவரும் அதிலேறி ஸரயூ நதியின் பெருமையைப் பேசிக்கொண்டே கங்கா நதியின் தென் கரையை யடைந்து, இறங்கி வேகமாக நடந்தனர். ஜன ஸஞ்சாரமில்லாமல் பயங்கரமாயிருக்கின்ற ஓர் கானகத்தைக் கண்டு, 'சிங்கங்களும் புலிகளும் பன்றிகளும் யானைகளும் நிறைந்திருக்கின்ற இக் கானகத்தின் பெயர் யாது?' என்று தாசரதிகள் கேட்க, அதற்கு விசுவாமித்திரர்—'முன்பு இது தேவர்களால் நிருமிக்கப்பட்டுத் தேவலோகத்தோடொத்து மலத மென்றும் கரூச

மென்றும் பெயர்கொண்ட இரண்டு தேசங்களாயிருந்தது. முன்னே இந்திரன் விருத்ராசுரனை வதைக்க, உடனே அவ் விந்திரனை பிரமஹத்தி பிடித்ததால் அவனைப் பாவமும் பசியும் வெகுவாய்ச் சூழ்ந்துகொண்டன. அப்பொழுது தேவர்களும் முனிவர்களும் அவ் விந்திரனுக்குக் கங்கை முதலிய புண்ய தீர்த்தங்களால் அபிஷேகஞ் செய்து அவ் விந்திரனது சரீரத்தினின்றும் விலகிய மலமென்றும் கரூசமென்றும் சொல்லப்பட்ட பாவத்தையும் பசியையும் இத் தேசத்தில் ஒழியும்படி செய்தனர். இந்திரனும் தனது மல கரூசங்களை விட்டுத் தான் தூயனானதற்கு ஆனந்தித்து அத் தேசங்கள் செழித்து விளங்குமாறு செய்தனன். அப்படியே இவை செழித்து விளங்கிச் சில காலஞ் சென்றன. தாடகையென்னும் பெயர் கொண்ட ஓர் யக்ஷ கன்னிகை உண்டாயினள். அவள் பிறந்தது முதல் ஆயிரம் யானை பலமுடையவளாகி நினைத்தபடி வடிவங் கொள்ள வல்லவளுமாயிருந்தனள். அவளைச் சுந்தனென்பவன் மணம் புரிந்தனன். அவளுக்கு மாரீச னென்னும் ராக்ஷஸனொருவன் பிறந்தனன். அவன் மஹா பயங்கரன். அத் தாடகை இம் மலத கரூச தேசங்களை எப்பொழுதும் பாழடையச் செய்கின்றனள். அவள்தான் ஒன்றரை யோசனை தூரத்தில் வழியை யடைத்துக்கொண்டு வாசஞ் செய்கின்றனள். அத் தாடகை வசிக்கும் வனம் வழியாகவே நாம் போகவேண்டும். நீ அக் கொடிய தாடகையை எனது சொற்படி முடிக்க வேண்டும். அப்படி முடித்தாயாயின் முன் போலவே இத் தேசங்கள் செழித்திருக்கும். இத் தேசம் புண்ய க்ஷேத்திரமாயிருந்தும் அத் தாடகையினால் பீடிக்கப் பட்டிருப்பதால் ஒருவரும் இங்கு நாட முடியாமலிருக்கின்றது' என்று மொழிந்தனர்.

பின்பு ராமன் 'மாமுனியே! யக்ஷர்கள் பலத்தில் மிகவும் குறைந்தவர்களென்று கேட்டிருக்கின்றனம். அப்படிப்பட்டவர்களில் ஒரு பெண்பிள்ளை ஆயிரம் யானை பலமுடையவளாயிருப்பது எப்படி?' என்று கேட்க—

விசுவாமித்திரர், "அத்தாடகை இயற்கையாகவே பலமற்றிருக்கும் பெண்பிள்ளையாகப் பிறந்தவளாயினும் வரலாபத்தினால் மிகச் சிறந்த பலமுடையவளாயிருக்கின்றனள். எவ்வாறெனில், முன்னொருகால் சுகேது வென்னும் யக்ஷனொருவன் புதல்வனைப் பெற வேண்டிப் பெருந்தவஞ் செய்தனன். அப்பொழுது பிரமன் அந்த யக்ஷாதிபதிக்கு ஆயிரம் யானை வலியுள்ள தாடகை யென்பவள் உண்டாகும்படி வரங்கொடுத்தனன். ஆனால் அந்த சுகேதுவுக்கு ஒரு புதல்வன் உண்டாகும்படி பிரமன் அருள் புரியாதொழிந்தனன். அத் தாடகையே இவள். பிறகு அத் தாடகையை அவளது தந்தை சுந்தனென்பவனுக்கு விவாஹஞ் செய்வித்தனன். சுந்தனுக்கும் தாடகைக்கும் மாரீசனென்னும் புதல்வன் பிறந்தனன். அம்மாரீசன் சாபத்தினால் ராக்ஷஸனாய்விட்டான். அந்தச் சாபத்தின் காரணம் யாதெனில், சுந்தன் அகஸ்தியரால் முடிந்து போகையில் அத்தாடகை தனது பிள்ளையைக் கூட்டிக்கொண்டு அம் மாமுனியை வென்று முடிக்க நினைத்து கர்ஜித்துக்கொண்டு அம் மாமுனியைப் பக்ஷிக்கும்பொருட்டு எதிர்த்தோடினள். அப்போது மாமுனிவர் மிகச் சினங்கொண்டு, மாரீசனை 'நீ ராக்ஷசனாகக் கடவாய்' என்று சபித்தனர். தாடகையும் 'நீ இவ் வுருவம் மாறி, பார்க்க வழங்காதபடி கோரமான முகத்துடன்கூடி, மனிதரைப் பிடுங்கித் தின்னும் தன்மையளாவாய்' என்று சபித்துவிட்டனர். சாபம் அப்படியே பலிக்க உலகமனைத்தும் வருந்தும்படி தாடகை மிகவும் கோரமான வடிவங்கொண்டு கொடிய செய்கை மேலிட்டுத் திரிகின்றனள்.

[முனிவன் தாடகாவதஞ்செய்யக் கட்டளையிடுதல்.]

இவளை வதஞ் செய்ய நீ அருவருப்புக் கொள்ளத் தகாது. பிரஜைகளின் நன்மைக்குரிய காரியமொன்று கொடியதாயினும் அபவாதத்தை விளைவிப்பதாயினும் உலகத்

தைக் காக்கவேண்டி அதைக் கட்டாயம் செய்யவேண்டும்; மாதர்களாயினும் கொடியவர்களாயின் அவர்களைக் கொல்லுவது முறைமையே. முன் பூமியையெல்லாம் பாழடையச் செய்யவேண்டு மென்றெண்ணங் கொண்ட விரோசன புத்திரியாகிய மந்தரை யென்பவளை இந்திரன் முடித்தானென்பதை யாவருங் கேட்டிருக்கிறோமல்லவா? இன்னமும் சுக்கிரனுக்குத் தாயாகிப்ருகு மஹரிஷியின் பத்தினியாகிய ஒரு பெண்பிள்ளை முன்பு உலகத்தில் இந்திரனே யில்லாமல் தொலைக்கவேணுமென்று நினைவு கொண்டு கடுமையான விரதஞ் செய்யத் தொடங்க, அவளை விஷ்ணு வதைத்தாரென்பதுமுண்டே. மற்றும் பல மஹாத்மாக்களும் அதர்மத்தில் மனஞ் சென்ற மாதர்களைக் கொன்றதுண்டு" என்று மொழிந்தனர்.

[தாடகையைக் கண்ட ராமன் அங்கபங்கஞ்செய்து விட்டுவிடலாமென நினைத்தல்.]

அதுகேட்டு ராகவன் பெரியோர்களின் கட்டளையைச் சிரமேற்கொண்டு நடப்பதாக வாக்களித்து உடனே வில்லில் நாணை யேறிட்டு ஒலிப்பித்தனன். அந்நாணொலியைக் கேட்டுத் தாடகையின் வனத்தில் வஸிப்பவர் யாவரும் அஞ்சி நடுங்கினர். அதைக் கேட்டுத் தாடகையும் அளவற்ற கோபங் கொண்டு அவ்வொலி எத்திசையினின்று வருகின்றதென்று நிதானித்தறிந்து அத்திசையை நோக்கி வேகத்துடன் ஓடி வந்தனள். அவள் ஓடி வருவதைக் கண்டு, ராமன் தம்பியை நோக்கி 'லக்ஷ்மண! இத்தாடகையின் வடிவத்தைப்பார். இவள் யாராலும் வெல்லமுடியாதவள். மேலும் இவள் மாயா பலமுள்ளவள்; இவளை இப்பொழுது காதையும் மூக்கின் நுனியையும் அறுத்துத் துரத்திவிடுகின்றேன். இதனால் குருவின் கட்டளையையும் ஒருவாறு நிறைவேற்றினவனாவேன்; இவள் ஸ்திரீயானதுபற்றி இவளைக் கொல்ல என்மனம் துணியவில்லை. ஆகையால் கைகளையும் கால்களையும் முறித்து விட்டுவிடலாமென்று எனக்குத் தோன்றுகின்றது' என்றனன்.

[முனிவர் தாசரதிகளுக்கு மங்களாசாஸனஞ் செய்தல்.]

இப்படி ராமன் சொல்லிக் கொண்டிருக்கையில், அத்தாடகை கைகளிரண்டையும் உயரவெடுத்துக் கர்ஜித்துக் கொண்டே லக்ஷ்மணனை விட்டு ராமனையே எதிர்த்தோடி வந்தனள். அதைக் கண்ட விச்வாமித்ரரும் தாம் ராமனுக்குள்ள அமாநுஷ சக்தியை அறிந்தவராயினும் அவ்வரக்கியினது கொடுந்தன்மையைக் கண்டு மனக்கலக்கமுற்று, அவளை 'ஹும்' என்று அதட்டிவிட்டு 'ராமலக்ஷ்மணர்களுக்கு க்ஷேமமும் ஜயமும் உண்டாகவேணும்' என்று மங்களாசாஸனம் பண்ணினர்.

[தாடகையின் செய்தி கூறுதல்.]

இப்படியிருக்க, அத்தாடகையும் புழுதியை வாரி எங்கும் இறைத்துப் பேரிருளை விளைவித்து ஒரு முகூர்த்த காலம் அந்த ராமலக்ஷ்மணர்களிருவரையும் ஒன்றுந் தெரியாமல் மனம் மயங்கச் செய்து, பின்பு மாயையைக்கொண்டு கண்ணுக்குப் புலப்படாதபடி நின்று கற்களை அளவில்லாதபடி பொழிந்தனள். ராமனும் மிகச்சினங்கொண்டு பாணங்களை ஓயாமற் பொழிந்து அத்தாடகை கொண்டெறியுங் கற்களையெல்லாம் தடுத்துப் பொடியாக அடித்து, அவளது கைகளை அறுத்துத்தள்ளினன். பின்பும் அவள் கர்ஜித்துக் கொண்டிருக்கையில் லக்ஷ்மணன் அவளது காதுகளையும் மூக்கு நுனியையும் அறுத்தனன். அத் தாடகை நினைத்தபடி வடிவங்கொள்ள வல்லவளாகையால் பலவிதமான வடிவங்களைக்கொண்டு மாயையினால் மறைந்து பயங்கரமாகக் கல்மழையைப் பொழிந்து திரிந்து கொண்டிருந்தனள்.

[முனிவரது கட்டளையினால் தாடகா வதம்.]

விசுவாமித்திர மாமுனிவர் அப்பொழுது இத்தாடகையை இராமன் முடிக்க நேரிட்டதேயென்று களித்து, 'ராமா! இவ்வரக்கியின்மீது இது வரையில் நீ தயை செய்தது

போதும்; இவளை இப்பொழுதே முடித்துவிடுதல் நலம்; ராக்ஷஸர்கள் அந்திப்பொழுதில் யாவராலுமெதிர்க்க வொண்ணாத வல்லமை பெறுவார்கள். அப்பொழுது அவர்களை முடிப்பது எப்படிப்பட்ட வல்லமை பெற்றவர்களுக்கும் முடியாது. ஆகையால் அந்திப் பொழுதிற்கு முன்னமே இவளை முடித்துவிடு' என்று கட்டளையிட்டனர். ராமனும், கண்ணுக்குத் தோற்றாமல் கற்களைப் பெய்கின்ற அத்தாடகையின் முழக்கத்தினால் அவளிருக்குந் திக்கையறிந்து அம்புகளைப் பொழிந்து எங்கும் போகவொட்டாமல் அவ்விடத்திலேயே தடுத்து விட்டான். தாடகையும் தான் மாயா பலங்கொண்டு கண்ணுக்குப் புலப்படாதபடி நின்றும் அது பயனற்று, ராம பாணங்களால் தடுக்கப்பட்டுச் செய்வதறியாமல் கண்ணுக்குப் புலப்பட்டுக் கடுமையாகக் கர்ஜித்துக்கொண்டு ராமனையும் லக்ஷ்மணனையும் நோக்கி எதிர்த்தோடி வந்தனள். இங்ஙனம் கடுமையாக இரைத்துக்கொண்டு ஓடி வருகின்ற தாடகையினது மார்பில் ஓர் அம்பைத் தொடுத்து நாட்ட, அவ்வளவிலே அவள் கீழே விழுந்து மாண்டனள். அப்பொழுது மூவுலகும் களித்த களிப்பு அளவிடமுடியாததாம்.

[தேவேந்திரன் வந்து கூறியபடி முனிவர் பல அஸ்த்ர வித்யைகளைக் கற்பித்தல்.]

இதையறிந்து மிக மகிழ்ச்சி கொண்ட தேவேந்திரன் அமரர்களோடு அங்கு வந்து தோன்றி மாமுனிவரை நோக்கி, "ராகவனிடத்தில் உமக்குள்ள நேசத்தை நீர் இப்போது வெளியிடவேண்டும். நீர் தவ மகிமையால் பெற்ற அஸ்திர வித்தையை ராமனுக்குக் கற்பிக்க வேண்டும். தேவர்களுக்காக ஒரு பெரிய காரியத்தை ராமன் செய்யவேண்டியிருப்பதால் அவசியம் கற்பிக்கவேண்டும்" என்று சொல்லி, விசுவாமித்திரரைப் பூஜித்துப் போயினன். தாடகையை வதஞ்செய்து அவ் வனத்தை விளங்கச் செய்த ராமலக்ஷ்மணர்கள் அன்றிரவு அவ் வனத்தில் மாமுனிவரோடு தங்கியிருந்தார்கள். பொழுது விடிந்தவுடனே முனிவரும் ராமனை எழுப்பி "ராம! பெரும் புகழ் பெற்ற உனக்கு நான் என் அன்பிற்குப் போக்குவீடாக நான் கற்ற திவ்யாஸ்திரங்களனைத்தையும் கொடுக்கின்றேன்; தண்ட சக்ரம், தர்ம சக்ரம், கால சக்ரம், விஷ்ணு சக்ரம், ஐந்த்ராஸ்த்ரம், வஜ்ராஸ்த்ரம், சிவசூலம், ப்ரஹ்ம சிரஸ், ஐஷீகாஸ்த்ரம், ப்ரஹ்மாஸ்த்ரம் ஆகிய இவைகளைக் கொடுக்கின்றேன். இவ்வளவேயன்றி, மோதகி யென்றும் சிகரி யென்றும் இரண்டு கதைகள் மிகுந்த ஒளிபொருந்தியவை என்னிடத்திலிருக்கின்றன. அவ்விரண்டையும் கொடுக்கின்றேன். இராமா! இன்னமும் தர்மபாசம், காலபாசம், வருணபாசம் முதலியனவும் தருகின்றேன். பெற்றுக்கொள்வாய். தர்ப்பணம், சோஷணம், ஸந்தாபனம், விலாபனம் என்னும் அஸ்திரங்களையும், மதனாஸ்திரத்தையும், மோகனாஸ்திரங்களையும் கொடுக்கின்றேன். பெற்றுக்கொள்". என்றுரைத்து (அம்மாமுனிவர்) பரிசுத்தராகிக் கிழக்கு முகமாக நின்று அன்போடு மிகவும் சிறந்த அவ் வஸ்திர மந்திரங்களனைத்தையும் நினைத்து ஜபஞ் செய்து இராமனுக்கு உபதேசிக்க, அவரது கட்டளைப்படி சிறந்த மஹாஸ்திர தேவதைகள் யாவும் அப்பொழுது காந்திமயமான சரீரங்களோடு பளபள வென்று விசுவாமித்திரரருகே வந்து நின்று ராமனை நோக்கி நமக்குத் தக்கதோர் இருப்பிடம் கிடைத்ததே யென்று மகிழ்ந்து 'ரகுகுல திலகனே! மிகவும் மகிமை பொருந்திய நாங்கள் உனக்குக் கிங்கரர்களாயினம்' என்று உரைத்தன. ராமனும் 'அப்படியே' யென்று அங்கீகரித்து அவைகளைக் கையினால் தடவிக்கொடுத்து 'யான் மனத்தில் நினைக்கும் போது நீங்கள் வந்து உதவவேண்டும்' என்று அவைகளுக்குக் கட்டளையிட்டனன்.

இங்ஙனம் ராமன் விசுவாமித்திரரால் அஸ்திர மந்திரங்களை உபதேசிக்கப் பெற்றுக் களித்து அவற்றைச் செலுத்தும் முறையை உபதேசித்தது போலவே உபஸம்ஹாரக்ரமத்தையும் உபதேசிக்குமாறு மாமுனியை வேண்ட, மாமுனியும் அங்ஙனமே உபதேசிக்க

ஸ்ரீராமன் அம் மந்திரங்களை யெல்லாம் பெற்றுக்கொண்டு அவ் வுபஸம்ஹார மந்திர தேவதைகளை நோக்கி, 'காரியம் நேரிடுகிற சமயத்தில் யான் மனத்தில் நினைத்த மாத்திரத்தில் நீங்கள் வந்து எனக்கு உதவி செய்யவேண்டும். இப்பொழுது நீங்கள் இஷ்டப்படி போய்வரலாம்' என்று விடை யளித்தான்.

[முனிவர் வாமனாச்ரம விருத்தாந்த முரைத்தல்.]

அதன்பின் மூவரும் வழி நடந்து சென்றுகொண் டிருக்கையில் ஸ்ரீராமன் ஓர் அழகிய சோலையைக்கண்டு வியந்து அதன் வரலாற்றைக் குறித்து மாமுனியை வினவ, அவரும் "ராம! ஸ்ரீ மகாவிஷ்ணு உலகத்தில் தவஞ் செய்யும் பொருட்டும் யோகத்தை யனுஷ்டிக்கும் பொருட்டும் இவ் வனத்தில் நெடுங்காலம் வாஸஞ் செய்துகொண்டிருந்தனர். வாமனமூர்த்தி தவம் புரிந்திருந்த ஆச்ரமமும் இதுவே. இங்குக் காச்யபமாமுனியும் தவம் புரிந்து சித்திபெற்றனர்; ஆனதுபற்றி இது 'ஸித்தாச்ரமம்' என்று யதார்த்தமாகிய பேருடன் விளங்குகின்றது. வாமனனாய் அவதரித்து மாவலியை யாசித்து, த்ரிவிக்ரம ரூபங் கொண்டு, தனது மெல்லடிகளாலே உலகங்களையளந்து யாவர்க்கும் நன்மையைச் செய்த ஸ்ரீமந் நாராயணன் இவ் வாச்ரமத்தில் முன்பு வஸித்திருந்தனன் என்பதே இவ்விடத்திற்கு முக்கியமான சிறப்பு; நானும் அவ் வாமன ரூபியான பகவானிடத்தில் பரம பக்தியைச் செய்து 'வாமனன் மண்ணிது' வென்று இம் மண்ணை மோந்துகொண்டு அவனுடையதான இவ்வாச்ரமத்தில் குடியிருக்கின்றேன். யாகத்தைக் கெடுக்கும் ராக்ஷஸர்கள் இவ் வாச்ரமத்திற்கே வருவார்கள். ராம! கொடிய அவ் வரக்கர்களை இவ்விடத்தில்தான் கொல்லவேண்டும்" என்று சொல்லிக்கொண்டே போகையில், அந்த ஸித்தாச்ரமத்தில் வாஸஞ் செய்யும் முனிவர்கள் அனைவரும் விசுவாமித்திர மாமுனிவ வந்தது கண்டு உவந்து அவருக்கும் ராம லக்ஷ்மணருக்கும் ஸத்காரஞ் செய்தனர்.

[மாமுனிவர் யாகதீக்ஷைகொள்ளுதலும் தாசரதிகள் வேள்வியை நிறைவேற்றிப் புகழ்பெறுதலும்.]

பின்பு தாசரதிகள் முனிவரை நோக்கி "இன்றைய தினமே யாகதீக்ஷை பெற்றுக்கொள்வீராக' என்று வேண்ட, அவரும் ஐம்புலன்களையு மடக்கிக் கொண்டு அப்பொழுதே யாகஞ்செய்ய தீக்ஷித்துக்கொண்டனர்.

அந்த ராஜகுமாரர்களும் போர்புரிய வேண்டு மென்கிற விருப்பத்துடன் விளங்குவதைக் கண்ட அங்குள்ள முனிவர்கள் 'இன்று முதல் ஆறிரவுகள் நீங்களிருவரும் ஜாகரூகர்களா யிருக்கவேண்டும். இம் மாமுனிவர் தீக்ஷித்துக் கொண்டு அதற்குரிய மௌந விரதத்துட னிருப்பதுபற்றி உங்களிடம் யாதொன்றும் மொழியாதிருப்பர். ஆகையால் அவர்க்குப் பதிலாக நாங்கள் உரைக்கின்றனம்' என்றனர்.

அவ்விருவரும் அம்மொழியைக் கேட்டு மிக்க ஊக்கங் கொண்டு நித்திரையின்றி ஆறு அஹோராத்ரங்கள் அத்தபோவனத்திற்கு ரக்ஷையாகக் கையில் பெரிய வில்லொன்றேந்திப் பகைவரை யடக்குவதற்குரிய மனோதிடத்துடன் அவ்விசுவாமித்திர மாமுனியைக் காத்துக்கொண்டு வஸித்திருந்தனர்.

இப்படி ஐந்து தினங்கள் கடந்து ஆறுவதுதினம் வரும்போது யஜ்ஞவேதியானது யாகப்பொருள்களுடனே திடீரென்று எரிந்தது. அப்பொழுது ஆகாயத்தில் பயங்கரமாகப் பெரிய ஒலியொன்று உண்டாயிற்று. மாரீச ஸுபாஹுக்க ளென்னும் அரக்கர்களிரு

வரும் மாயையைப் பலவிதமாகச் செய்துகொண்டு ஆகாயமெங்கும் பரந்து எதிர் நோக்கி ஓடிவந்தனர். யாகவேதிகையும் இரத்த வெள்ளத்தினால் நிறைந்து எரிந்துகொண்டிருந்தது.

ராமன் அந்த ஸுபாஹு மாரீசர்கள் தன்மேலெதிர்த்தோடி வருவதைக்கண்டு லக்ஷ்மணனைப் பார்த்து 'லக்ஷ்மணா! இதோ பார்; இம்மாநவாஸ்திரமானது கொடுந் தொழிலாளரான அரக்கர்களைப் பறக்கடிக்கப்போகின்றது' என்றுரைத்துக் கோபம் மேலிட்டு, நெருப்புப்பொறிபறக்கும் மாநவாஸ்திரத்தைத் தொடுத்து மாரீசனது மார்பிலெய்தனன். உடனே அம்மாரீசன் கடல்நீர் வெள்ளத்தில் நூறுயோஜனை தூரத்திற்கப்பால் தள்ளுண்டு விழுந்தனன். பிறகு ஆக்நேயாஸ்திரத்தை யெடுத்துத்தொடுத்து ஸுபாஹுவின் மார்பில்நாட்டினன். அதனால் அவன் அடியுண்டு கீழேவிழுந்தனன். மற்றுமுள்ள அரக்கர்களையும் முடித்து, அந்த ராகவன் அங்குள்ள முனிவர்களனைவரையும் மிக மகிழ்வித்தனன். அந்தரிஷிகள் யாவரும் தாசரதிகளை மிகப்புகழ்ந்து பூஜித்தனர்.

பின்பு யாகம் நிறைவேற நடத்தி நான்கு திசைகளும் யாதொரு உபத்ரவமுமின்றி ஸுகமாயிருப்பது கண்டு, விசுவாமித்திர மாமுனிவர் ராமனை நோக்கி 'ராமா! உனது புஜபலத்தினால் யான் எனது காரியம் நிறைவேறிப் பயன் பெற்றவனாயினேன். நீயும் பிதாவினது வசனத்தைக் காப்பாற்றினாய். எனது யாகத்தை முடிவடையச் செய்து இவ்வாச்ரமத்தினது ஸித்தாச்ரமமென்னும் பெயரை மெய்ப்பித்துப் பெருங்கீர்த்தியும் பெற்றனை' என்று புகழ்ந்தனர். .... .... - ... ... *

வால்மீகி ராமாயணத்தில் விச்வாமித்ர யாகஸம்ரக்ஷண கட்டம் முற்றிற்று.

---

## கம்பர் காட்டிய - மாமுனிவேள்விகாத்தல். (2)

(அதாவது - விச்வாமித்ரயாக ஸம்ரக்ஷணகட்டம்.)

கம்பராமாயண பாலகாண்டத்தில்
கையடைப்படலம் தாடகைவதைப்படலம் வேள்விப்படலம்
ஆக மூன்று படலங்களிற் கூறிய கதையின் ஸாரம் வருமாறு:—

[விச்வாமித்திரர் தசரதனிடம்வந்து அவனைப்புகழ்தல்.]

ஒருநாள் தசரத சக்ரவர்த்தி கொலுமண்டபத்தில் இனிது வீற்றிருக்கையில் அங்கு விச்வாமித்ர முனிவர் வந்து சேர்ந்தார். அவரை மன்னவன் உபசரித்து இன்சொற் கூறித் தோத்திரஞ்செய்து, தேவரீர் இங்கு எழுந்தருளப் பெற்றது அரும்பெருந் தவப்பேறுகொல்! என்று சொல்ல, முனிவர் 'என்னைப்போன்ற முனிவர்க்கும் தேவர்க்கும் துன்பமுண்டானால் அதனை நீக்கும் வல்லமையுள்ளவர் மும்மூர்த்திகளும் இந்திரனும் அயோத்தி மன்னனுமேயன்றி வேறுயாவர்? இந்திரனும் தன் பொன்னுலகிழந்து பரிதபிக்க நேர்ந்தால் நின்னடி பணிந்தன்றோ சேமம் பெறுவது' என்று கூறிப் புகழ்ந்தனன்.

[தசரதன் விச்வாமித்திரரது அபேக்ஷையை மறுத்துக் கூறுதல்.]

அப்போது மன்னவன் 'யான் செய்யவேண்டிய பணிவிடை யாது?' என்று கைகளைக் கூப்பிக்கொண்டு கேட்க; முனிவன் 'தபோவனத்தில் யான் செய்யும் யாகத்திற்கு இடையூறாக இராக்கதர்கள் வந்து கெடுக்காதபடி காத்தல்புரிய நின் புதல்வர் நால்வருள்

மூத்தவனான ஸ்ரீ ராமனை என்னுடன் அநுப்பவேணும்' என்றனன். அது கேட்டு மன்னவன் மிக வருந்தி ஒருவாறுதேறி இராமனுடைய இளமையையும் அரக்கரை அழிப்பதற்கு வேண்டிய ஆயுதப் பயிற்சி யில்லாமையையும் அவ்விஷயத்தில் தனக்குள்ள பெருந் திறமையையுமெடுத்துக் கூறி 'சிறியனான இராமன் எதுக்கு? யான் வந்து காக்கின்றேன்' என்று கூறினன்.

[விச்வாமித்திரர் சீற்றங்கொள்ள, வஸிஷ்டர் தேற்றுதல்.]

அதுகேட்ட முனிவன் தன்வார்த்தைக்குத் தசரதன் குறுக்குச் சொன்னதுபற்றிப் பெருங்கோபங்கொண்டு உடனே ஆசனத்தைவிட்டெழுந்த வளவிலே இம் முனிவனது சீற்றத்தினால் உலகுக்கே முடிவுகாலம் வந்து விடுமோவென்று சங்கிக்க வேண்டும்படி யிருந்ததனால் அங்கிருந்த வஸிஷ்ட முனிவன் எழுந்து அம்முனிவனை ஒருவாறு ஸமாதானப்படுத்தித் தயரதனைநோக்கி "இம்முனிவன் இப்பொழுது உன்னிடம் வந்து இராமனைத் தருகவென்று யாசிப்பதெல்லாம் இராமனுடைய நன்மைக்காகவே யன்றி வேறன்று; இவனால் உனது குமாரனுக்கு எவ்வளவோ நன்மைகள் நேரவிருப்பதைத் தடுக்கலாகாது; இம்முனிவன் வசத்துள்ள அஸ்திர சஸ்திர வித்தைகளனைத்தும் இவனால் இராமனிடம் வந்து சேரப்போகின்றன; ஆதலின் இராமனை இவனுடனனுப்புவதே தகுதி' என்று கூறினன்.

[விச்வாமித்திரர் ராமலக்ஷ்மணர்களுடன் செல்லுதல்.]

ஸ்ரீ ராம லக்ஷ்மணர்களைத் தசரதன் விச்வாமித்ர முனிவனிடமொப்பித்து 'இவர்கட்குத் தாயும் நீயே தந்தையும் நீயே; இவர்கட்கு ஆகவேண்டிய நன்மைகளைச் செய்தருள்வது' என்று கூறினன். பிறகு முனிவன் சினந்தணிந்து மகிழ்ச்சியோடு சக்ரவர்த்திக்கு ஆசிகூறி ராஜ குமாரர்களுடன் தன் தவவனஞ் செல்லப் புறப்பட்டனன். ராம லக்ஷ்மணர்களிருவரும் வாள் அம்பறுத்தூணி வில்முதலியன கொண்டு முனிவன் பின்னே நடந்து அயோத்தி நகரைவிட்டு அகன்றனர். மூவரும் அயோத்தியின் எல்லையைக் கடந்து செல்லுகையில் இராப்பொழுது வந்துவிட்டதனால் ஒரு சோலையில் தங்கினர்.

[முனிவர் அங்க நாட்டைப்பற்றிக் கூறுதல்.]

பிறகு பொழுது விடிந்தவாறே மூவருமெழுந்து செல்லுகையில் இராமன் ஒரு சோலையைக் கண்டு இது யாது? என்று வினவ; 'இது காமனச்சிரமமும் சிவபெருமான் யோகாப்யாஸஞ் செய்த இடமுமாம்; அப்பெருமான் யோகஞ் செய்கையில் அதனைக் கெடுக்க மன்மதன் அப்பெருமான்மேல் மலரம்புகளைத் தொடுக்க, அப்பரமன் சினந்து தன் நெற்றிக் கண்களைத் திறக்க, அதனினின்று எழுந்த தீப்பொறி சுட்டதனால் மன்மதன் தன் அங்கத்தை யிழந்து அதுமுதல் அனங்கனாயினன். அதுபற்றியே இவ்விடங்களெல்லாம் அங்கநாடு எனப் பெயர் பெறும். நீ வினவிய இடமும் மன்மதனை அச்சிவபெருமான் சாம்பராக்கிய காரணத்தினால் காமாச்ரம மென்று பெயர் பெற்ற இடமாகும்' என்று முனிவன் மொழிந்தனன்.

[முனிவர் ராஜகுமாரர்களுக்கு மந்த்ரவித்தை யளித்தல்.]

அவ்விடத்து அருகே வாழ்கின்ற முனிவர்கள் இவர்களின் வருகையை யுணர்ந்து எதிர்கொள்ள, அம்முனிவர்களுடனே அவர்கள் அன்று அங்குத் தங்கியிருந்து மறுநாள் பயணமாகி நடுப்பகலில் ஒரு பாலைவனஞ் சேர்ந்தனர். அப் பாலைவனத்தின் கொடுமை வாய்கொண்டு கூறுந்தரமன்று. ராஜ குமாரர்கள் மஹாவீர்ய சாலிகளேயானாலும் பரம

ஸுகுமாரர்க ளாதலால் சிறிது வருந்துவரே யென்று முனிவன் இரக்கங்கொண்டு, அவர்கட்கு வெம்மை தோன்றாமைக்காக பலை அதிபலை யென்னுமிரண்டு வித்தைகளையு முபதேசித்தனன். அதனால் அப் பாலைவனம் அக் குமாரர்களுக்குக் குளிர்ந்து தோன்றிற்று.

[முனிவன் தாடகையைப் பற்றிக் கூறுதல்.]

'இவ்விடம் இங்ஙனம் வெப்பமாயிருத்தற்குக் காரணம் யாது? காமனை யெரித்த சிவபிரானது கட்கனல் பட்டதே காரணமா? வேறு ஏதேனுங் காரணமுண்டா ?' என்று இராமன் முனிவனைக் கேட்க, இங்குத் தாடகை யென்னுமரக்கியொருத்தி மிகக்கொடியவள் உலாவிக் கொண்டிருப்பது காரணமாகவே இவ்விடம் இவ்வளவு வெப்பமாயிருக்கின்றதென்று தெரிவிக்க விரும்பிய முனிவன் அத்தாடகையின் வரலாற்றைக்கூறுகின்றான்;—யக்ஷகுலத்துத் தோன்றிய மகாபலசாலியான சுகேது வென்னுமொருத்தன் மகவில்லாக் குறையால் பிரமதேவனை நோக்கி நெடுநாள் தவம்புரிந்து அத்தேவனைப் பிரத்யக்ஷமாகக் கண்டு தன் குறையைத் தெரிவிக்க 'உனக்கு ஆண் சந்ததி யுண்டாகாது, பெண் சந்ததி மாத்திரம் ஒன்றுண்டாம்; மிகுந்த அழகும் ஆயிரம் மதயானை வலிமையுமுடைய ஒரு பெண் உனக்குத் தோன்றுவள்' என்று பிரமன் அநுக்ரஹித்துச் செல்ல, அப்படியே லக்ஷ்மிபோலப் பிறந்து வளர்கின்ற மிகவழகிய தாடகை யென்னும் அக் குமரியை ஸுந்த னென்னும் யக்ஷனுக்கு மணம்புரிவித்துக் கொடுக்க, அவனுக்கு மாரீசனென்றும் ஸுபாஹுவென்றும் இருமக்கள் தோன்றினர். அவ்விருவரும் மாயை வஞ்சனை முதலிய தீய குணங்களுடன் வளர்கையில் அவர்களது தந்தையாகிய சுந்தன் மிக்க செருக்கினால் அகத்திய முனிவனது ஆச்ரமத்திலே வந்து மான்களைக் கொன்றுதின்பது மரங்களைப் பறித்தெறிவது முதலிய கொடுமைகளைச் செய்து அம்முனிவனது கோபத்தீயினால் நீறாகியொழிந்தனன். இங்ஙனம் கணவனிறந்தொழிந்ததை யறிந்த தாடகை அம்முனிவனைக் கொன்றிடுவேனிதோ! என்று சொல்லிக் கொண்டு ஸுபாஹு மாரீசர்களுடனே அங்குச்சென்று ஆரவாரஞ்செய்ய, முனிவன் சீறிச் சிவந்து 'நீங்கள் அரக்கர்களாகி இழிகுலம் புகுவீர்' என்று சபிக்க, உடனே மூவரும் அரக்கராயினர். பிறகு ஸுபாஹு மாரீசர்கள் இராவணனோடு உறவு கொண்டாடி அவனுடைய தூண்டுதலால் உலகமெல்லாந்திரிந்து அடித்து நாசம் பண்ணிக்கொண்டிருந்தனர். பிறகு தாடகை அப்புதல்வர்களைப் பிரிந்து இக்காட்டையடைந்து மிக்க வளம்பொருந்தியிருந்த இவ்விடங்களையெல்லாம் பாலை நிலமாகமாற்றிப் பாழாக்கிவிட்டனள். அக்கொடிய அரக்கி இங்கு உலாவுவதுபற்றியே இக்காடு இவ்வளவு வெப்பமடைந்துள்ளது. அவளே இவ்வங்க தேசத்து உயிர்களையெல்லாம் கொன்று தின்பவள், எனது வேள்விக்கும் இடையூறு விளைப்பவள். இராமா! இவளை நீ கொன்று முடித்தல் வேண்டும்; இல்லையாயின் இந்த அங்கநாடு மாத்திரமேயன்றி உலகம் முழுதுமே நாசமாய்விடும்—என்று கூறினர் விச்வாமித்ரமுனிவர்.

[முனிவன் தாடகையைக் கொல்லுமாறு கட்டளையிடுதல்.]

அவ்வளவிலே தாடகை ஆரவாரஞ் செய்துகொண்டு பெருஞ்சினத்துடன் அங்கே விரைந்துவர, இராமன் முனிவனதுகருத்தை யறிந்திருந்தும் பெண்கொலை பெரும்பாவமென்று கருதி வாளாவிருந்தனன். அப்போது முனிவன், இராமா! இவளை நீ பெண்ணெனக் கருதுதல் தகாது; பெண்டிர்க்குரிய நாணம் சிறிதுமற்று இந்திரன் முதலிய ஆண் புலிகளையும் தோற்பிக்கும் தோள்வலிபெற்ற இவளை ஆணென்றே கருதுவாயாக. நீ நினைக்கிறபடி பெண்கொலை பாதகமுமன்று; முன்பு தேவாசுர யுத்தத்தில் ஸ்ரீ மஹாவிஷ்ணு ப்ருகு மஹர்ஷியின் மனைவியான கியாதி என்பவளை வதைத்தது, தேவேந்திரன் ஒருகால் விரோசனனுடைய

மகளாகிய மந்தரையை வதைத்தது முதலிய சரிதைகளைக் கேட்டறியாயோ? அப்பெண்கொலையால் திருமாலுக்கும் தேவேந்திரனுக்கும் பெருங்கீர்த்தியுண்டாயிற்றேயன்றிப் பழியொன்றுமுண்டாகவில்லை யாதலால் இவளை நீ பெண்ணென்றே கொண்டாலும் வதைத்துப் புகழ் பெறுவாய்; முக்கியமாக நான் ஆராய்ந்து சொல்லுகிறேனென்பதுபற்றிக் கொன்றிடுவாயாக' என்று கட்டளையிட்டனன்.

[தாடகை வதம்.]

இராமன் அப்படியே கொன்றிடுவதென்று இசைவு கொண்டபோது அத்தாடகை தன் சூலத்தைச் சினத்தோடு இராமன்மீது வீச; அதனை இராமன் துணித்திட, பிறகு அவள் கல்மழைபொழிய, இராமன் அதனையும் அம்புகளால் தடுத்து அவளையும் மாய்த்திட, இறந்து கீழேவிழுந்தொழிந்தாள்.

[முனிவன் தேவர்களது சொற்படி இராமனுக்குப் படைக்கலங்கள் தருதல்.]

தேவர்கள் பெருமகிழ்ச்சிகொண்டு மாமுனிவனிடம் வந்து 'உன்னிடத்திலுள்ள தெய்வப் படைக்கலங்களெல்லாவற்றையும் ஸ்ரீ ராமனுக்குத் தந்தருள்க' என்று சொல்லி இராமன் மீது மலர்மாரி பொழிந்து சென்றனர். அப்படியே விச்வாமித்ரமுனிவன் இராமனுக்குப் படைக்கலங்கள் தந்தருள, அவை மிகுந்த குதூஹலத்தோடு இராமபிரானை வந்தடைந்தன. பிறகு மூவரும் ஒரு காதவழி நடந்து சென்றபிறகு பேரரவமொன்று செவிப்பட, இவ்வொலி யாதென்று இராமன் கேட்க, 'ஸரயூநதியில் கோமதிநதி வந்துசேரும் பேரொலியிது' என்று முனிவன் கூற, அங்குநின்றும் நடந்துசென்று மற்றொரு நதியை யடைந்தார்கள். அதுதான் கௌசிகிநதியென்பது. அதன் வரலாற்றை முனிவன் சொல்லலுற்றான்.

[முனிவன் கௌசிகீநதியின் வரலாறு கூறுதல்.]

ஆதியில் பிரமபுத்திரனான குசனென்னும் முனிவனுக்கு—குசாம்பன் குசநாபன் ஆதூர்த்தன் வஸு என்று நான்கு புதல்வர்கள் தோன்றியிருந்தனர். இவர்களுள் குசாம்பன் கௌசாம்பியென்னும் நகரத்திலும், குசநாபன் மகோதயமென்னும் நகரத்திலும், வஸு கிரிவ்ரஜமென்னும் நகரத்திலும் அரசு புரிந்து வாழ்ந்துவந்தார்கள். இவர்களுள் குசநாபனுக்கு அழகிற்சிறந்த நூறுமகளிர் தோன்றியிருந்து, அவர்கள் பருவம் வாய்த்துத் தோழிமாருடன் பூஞ்சோலையிற் சென்றிருக்க, வாயுதேவன் அவர்களின் அழகு கண்டு காமுற்றுத் தன்னை மணக்குமாறு அவர்களை வேண்ட, அம்மகளிர் நாங்கள் தந்தையின் அநுமதியின்றி உடன்படமாட்டோமென்று மறுக்க, வாயுதேவன் கோபித்து அவர்களது உடலிற்புகுந்து முதுகை முறித்துக் கூனிகளாக்கினன். பிறகு அவர்கள் நடக்கமாட்டாமல் நகர்ந்துகொண்டேபோய்த் தந்தையிடம் செய்தி தெரிவிக்க, அவன் இம்மகளிரைத் தேற்றி நாளடைவில், சூளியென்னும் முனிவனது குமாரனான பிரமதத்தனுக்கு இவர்களை விவாஹஞ் செய்து கொடுத்தனன். அப்பிரமதத்தன் அவர்களைக் கையினால் பரிசித்தபோதே இவர்கள் கூன் நீங்கி முன்போல் கட்டழகிகளாய் விளங்க, அதுகண்டு மகிழ்ந்த குசநாபன் அவர்களையெல்லாம் காம்பிலியாநகரத்திற்கனுப்பிவிட்டு, தனக்குப் புத்திரனில்லாக் குறை தீரத் தான் புத்திரகாமேஷ்டி செய்தனன். அப்போது ஓமத்தீயினின்று காதி யென்னும் மகன் தோன்றினன். அந்த மகனுக்குக் குசநாபன் முடிசூட்டிச் சுவர்க்கம் புக, அந்தக் காதிக்குக் கௌசிகியென்பவளும் யானும் தோன்றினோம். தந்தை கௌசிகியை ப்ருகுவின் புதல்வனான ரிசீகனுக்கு மணஞ்செய்விக்க, அவன் சிலநாள் இல்லறவாழ்க்கைவாழ்ந்து பிரமலோகஞ் சேர்ந்தனன். பிறகு கௌசிகியானவள் காதலன் பிரிவைப் பொறுக்ககில்லாது நதியின் வடிவமாய் அவனை விடாமல் பின்தொடர்ந்து செல்ல, அதுகண்ட ரிசீகன் 'நீ பூலோ

கத்திலேயே பெருகி மனிதர்களின் பாவங்களைத் தொலைத்திடுவாய்' என்று நியமித்துத் திருப்பியனுப்பிவிட்டுத் தான் பிரம லோகம் சென்று புக்கான்—என்று கௌசிகீ நதியின் வரலாற்றைக் கூறி முடித்தனன்.

[முனிவன் ஒரு சோலையினிடத்தே வாமநாவதார விருத்தாந்தங் கூறல்]

பிறகு சிறிது தூரம் கடந்தபின் தாசரதிகள் ஒரு சோலையைக்கண்டு இது யாருடையதென்று கேட்க, முனிவன் மஹாபலியின் சரிதையையும் வாமநாவதாரச் செய்தியையும் கூறலுறுகின்றான்;—முன்னொருகால் திருமால் நெடுங்காலம் தவஞ்செய்த தலமிது. அக்காலத்தில், மூவுலகங்களையும் வென்று புகழ்பெற்ற மாவலி தன் வலிமையால் விண்ணையும் மண்ணையும் தன் வசமாக்கிக் கொண்டிருந்து, ஒரு பெரிய யாகம் செய்யத்தொடங்கி வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுக்கச் சங்கற்பித்தனன். தேவர்கள் அதனையறிந்து இச் சோலைக்கு வந்து இங்குத்தவம்புரிகின்ற திருமாலை வணங்கித் துதித்துத் தங்கள் குறைகளைச் சொல்லி மாவலிவேள்வி முடிவதற்கு முன் தங்களுக்கு நன்மை செய்யுமாறு வேண்டிக் கொண்டனர். அதற்கிசைந்த திருமால் உடனே காச்யபமுனிவனுக்கும் அதிதிதேவிக்கும் குமாரனாக அவதரித்துச் சிறுகுறளுருவாகி ப்ரஹ்மசர்யாச்ரம லக்ஷணங்கள் பொலிய அற்புதமான வடிவுடன் மாவலிபால் ஏகினன். அவனை மாவலி எதிர்கொண்டு உபசரித்து வடிவழகில் மிகவுமீடுபட்டு உனக்கு வேண்டுவதென்? என்று கேட்க, என்னுடைய பாதத்தால் யானளப்ப மூவடி மண்வேண்டுமென்று வாமனமூர்த்தி கூற, அங்ஙனமே தந்தேனென்று மாவலிசொல்ல, அங்குப் புரோஹிதராயிருந்த சுக்கிராசாரியர் ஞானக்கண்ணினால் கடவுளின் மாயையையறிந்து 'திருமாலே தனது மாயத்தினால் தன்னுருவை மறைத்து உன்னை வஞ்சிக்க இங்ஙனம் வாமனனாக வந்திருக்கின்றனன்; இவனுக்கு ஒன்றுங் கொடாதே; கொடுத்தால் உனக்கே கெடுதல் விளையும்' என்று கூறித்தடுக்க, அதற்கு மாவலி "திருமாலே தனது பெருமைகளை யிழந்து தாழ்வுற்று யாசகனாய் என்பால்வந்து ஒரு பொருளை வேண்டுவானானால் அவனுக்கு அதனைக் கொடுத்துப் பெருமை பெறுதலைவிட வேறொரு சிறப்பு எனக்குண்டோ? தானஞ்செய்தற்கு உத்தம பாத்திரம் இவனேயன்றோ; யார் எது கேட்டாலும் கொடுக்கக் கடவேனென்று விரதங்கொண்டிருக்கிற நான் இவனுக்குக் கொடாதிருக்க முடியுமோ? ஈவது விலக்குதல் கொடிய பாவமன்றோ" என்று சொல்லிவிட்டு, வாமனன் வேண்டியபடியே மூவடி நிலம் பெற்றுக்கொள்ளுமாறு தாரைவார்த்துத் தந்துவிட்டான். உடனே வாமனன் பேருருவங்கொண்டு [திரிவிக்கிரமனாகி] அம்மூவடி நிலத்தைத் தன் மூவடியாலளக்கப்புகுந்து ஓரடியால் மண்ணுலகையும் மற்றோரடியால் விண்ணுலகையுமளந்து 'மாவலீ! மூன்றடி தந்தோமென்றாய்; மற்றோரடிக்கு இடங்காட்டாய்' என்ன; அதற்கு அடியேனது தலையேயுள்ளதென்று மாவலி கூற, திருமால் அவன்முடிமீது திருவடியை வைத்து அழுத்தி அவனைப் பாதாளத்திற் செலுத்தினன். இங்ஙனம் மாவலியைச் செருக்கடக்கி மூவுலகையும் இந்திரனுக்குக் கொடுத்துவிட்டுத் தன் வியூஹமூர்த்தியில் தான் சேர்ந்தனன். இப்படி ஸ்ரீ மஹாவிஷ்ணுவும் காச்யபனும் தவம்புரிந்து சித்திபெற்ற இடமாதலால் யானும் இவ்விடத்தையே ஆச்ரமமாகக் கொண்டிருக்கின்றேன்—என்று கூறி முடித்தனன்.

[முனிவன் வேள்வி தொடங்குதலும் தாசரதிகள் அதனை நிறைவேற்றுதலும்.]

இப்படி கதை சொல்லிக் கொண்டே சென்று ஆச்ரமமெய்தி யாகத்திற்கு வேண்டியவற்றைச் சேகரித்துக் கொண்டு, ஸ்ரீராம லக்ஷ்மணர்களைக் காவல் காக்க நியமித்துத் தான்

யாகஞ் செய்யத்தொடங்கினன். அப்போது அவ்வரசகுமாரர்கள் கண்ணும் கருத்துமாய் அந்த ஷட்ராத்ரயாகத்தைக் காப்பதில் தீக்ஷை கொண்டனர். அரக்கரோடு பொருவதில் மிக உத்ஸாஹமுடைய இராமபிரான் ராக்ஷஸர்கள் எப்போது வருவார்களென்று பார்த்துக் கொண்டிருக்கையில், அரக்கர்கள் ஆகாசத்தில் தோன்றிப் பேராரவாரஞ் செய்தார்கள்; கணைமாரி பொழிந்தார்கள்; நீரும் நெருப்பும் ரத்தமுமாகச் சொரிந்தார்கள்; பெரிய மலைகளைப் பெயர்த்தெடுத்து எறிந்தார்கள்; வாய்வந்தபடி வைதார்கள்; பல பல கொடிய மாயைகளைச் செய்தார்கள். அப்போது அவை யாகபூமியில் சிறிதும் விழாதபடி இராமன் தனது அம்புகளைக்கொண்டே சரகூடம் கட்டினன். ஆயினும் அங்குள்ள முனிவர்கள் அரக்கர்களின் கொடுந்தொழில்களுக்கு அஞ்சி நடுங்கி இராகவனைச் சரணமடைந்து அபயம் வேண்டி நிற்க, பெருமான் அவர்கட்கு அபயமளித்து, வில்வளைத்து நாணியைக் காதளவு மிழுத்து அம்பெய்து மாரீசனைக் கடலில் தள்ளிச் சுபாகுவைக் கொன்று எஞ்சிய அரக்கர்களையும் தொலைத்திட, வானவர் மலர்மழைபொழிந்து துந்துபி முழங்கி வணங்கி வாழ்த்தினர்.

[முனிவன் இராமனைப் பாராட்டிக் கூறுதல்]

வேள்வியை இனிது முடித்த முனிவன் இராமனை நோக்கி 'உலகங்களின் ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களை அவலீலையாக நடத்து மாற்றல் பெற்ற நீ இந்தச் சிறு யாகத்தைக் காத்தது அரும்பெருந் தொழிலாக நினைக்கத் தகுமோ? எனது முற் பிறவிகளின் நல்வினைப் பயனாகவே நீ இங்ஙனம் வந்து அருள் புரிந்தாயென்றே நினைக்கத் தக்கது' என மொழிந்தனன்.

[மூவரும் மிதிலாபுரிக்குப் புறப்படுதல்]

இனி எமக்குக் கைங்கரியம் யாதோவென்று இராமன் வினவ, முனிவன் 'மிதிலாபுரியில் ஜனக சக்ரவர்த்தி நடத்தும் யாகத்தையும் நாம் போய்ப் பார்ப்போம், புறப்படுக' என்று சொல்ல, மூவருமாய் மிதிலாபுரிக்குப் புறப்படலானார்கள். ... ....

கம்பராமாயணத்தில் முனிவன் வேள்விகாத்தல் முற்றிற்று.

---

## கதை வேற்றுமைக் குறிப்பு

விச்வாமித்ரயாக ஸம்ரக்ஷண மென்னுமிந்த கட்டத்தில் வால்மீகி ராமாயணத்திற்கும் கம்பராமாயணத்திற்கும் கதையில் வேற்றுமை காணுமிடங்கள் சிலவேயாம். அவை எளிதினுணரத்தக்கன. சிலவே ஈண்டெடுத்துக் காட்டப்படுகின்றன.

1. மாரீசன் ஸுந்தனுக்கு மகனாகவும் ஸுபாஹு உபஸுந்தனுக்கு மகனாகவும் தாடகையினிடத்துத் தோன்றியதாக வான்மீகி கூறியுள்ளார்.

ஸுபாஹுமாரீசர்களிருவரும் ஸுந்தனுடைய புத்திரர்களாகவே தாடகையினிடத்துத் தோன்றியதாகக் கம்பர் கூறியுள்ளார்.

2. விச்வாமித்திரமுனிவர் ஸ்ரீ ராமலக்ஷ்மணர்களோடு வாமநாச்ரமத்தையடைந்தது தாடகாவதமான பின்பு என்றும், கௌசிகிநதியையடைந்து அதன் வரலாறு கூறுவது யாகம் செய்து முடித்து மிதிலைக்குப் புறப்படும் வழியடைவில் என்றும் வான்மீகம் காட்டுகின்றது.

இவ்விஷயங்களைக் கம்பர் வேறுபடக் கூறியுள்ளார். கதையின் அமைப்பிலும் வேற்றுமையுள்ளது ஸ்பஷ்டமாக அறியக் கூடியதே.

வாமநாவதார த்ரிவிக்ரமாவதார விருத்தாந்தங்களை வான்மீகி மிகச் சுருக்கமாகக் கூறியுள்ளார்; கம்பர் மிக விரிவாகக் கூறியுள்ளார். இங்ஙனே காண்க.

## ஸ்ரீமத் வால்மீகி ராமாயண – பாலகாண்டத்தில் முப்பத்தோராவது ஸர்க்கத்திலிருந்து ஐம்பதாவது ஸர்க்கம் முடியுமளவுமுள்ள கதைப்பகுதி மிதிலாநகர ப்ராப்தி கெட்டம் (3.)

[விசுவாமித்திரர் மிதிலாநகரத்திற்குப் போவோமென்று தாசரதிகளுக்குக் கூறுதல்]

*ராம லக்ஷ்மணர்கள் அன்றிரவு சென்றபின் விசுவாமித்திரரை வணங்கி ‘ மாமுனிவரே ! தேவரீர் கட்டளையிட்டபடி யெல்லாம் செய்யப் பாங்கான ஏவலர்களாகிய எங்களுக்கு இன்னமும் உமதிஷ்டப்படி கட்டளையிடவேண்டும்’ என்றனர். அப்போது அங்குள்ளமஹரிஷிகள் யாவரும் விசுவாமித்ர மாமுனியின் அநுமதி பெற்றுக்கொண்டு ராமனை நோக்கி, “ ராமா ! மிதிலா நகரத்திற்கரசனாகிய ஜனக மஹாராஜன் ஓர் யாகம் நடத்தப் போகின்றனன். அதற்கு நாங்கள் அனைவரும் போகப்போகின்றோம். நீயும் எங்களுடன் கூட வந்து அங்கு மிகவும் ஆச்சரியமான ஓர் உயர்ந்த வில்லையும் ஸீதை யென்னும் பெண்மணியையும் காணவேண்டும். அவ்வில்லானது, முன்பொரு காலத்தில் இந்த ஜனக ராஜனது வம்சத்திற் பிறந்த தேவராதனென்னும் ஓரரசன் யாகஞ் செய்ய . அப்போது தேவர்களால் கொடுக்கப்பட்டது. தேவர்களோ கந்தருவர்களோ அசுரர்களோ அரக்கர்களோ எவரும் அவ் வில்லை வளைத்து நாணேறிட வல்லரல்லர். இனி மனிதர்களைப்பற்றிச் சொல்லவேண்டுமோ ? மஹா பலசாலிகளாகிய பலரும் அவ்வில்லினுடைய ஸாரத்தையறியக் கோலி, அங்கே வந்து கடைசியில் அதை நாணேறிடவும் சக்தியின்றி வந்தவழியே திரும்பிப் போயினர் ; நீ வந்தாயாயின் அவ்விடத்தில் ஜனக மஹாராஜனையும், அவ்வில்லையும் அந்த யாகத்தையும் பார்க்கலாம். ஸீதையென்னும் பெண்மணியையும் பெறக்கூடும் ’ என்றனர்.*

[விசுவாமித்திரர் குசநாபனது பெண்ணின் கதையைக் கூறுதல்.]

*பின்பு விசுவாமித்திர முனிவர் அங்குள்ள வனதேவதைகளை நோக்கி, இந்த ஸித்தாச்ரமத்தினின்றும் புறப்பட்டு இமயமலையிலுள்ள தமது ஆச்ரமத்திற்குப் போவதாகச் சொல்லி விடைபெற்றுக்கொண்டு அந்த ஸித்தாச்ரமத்தை வலம்வந்து வடதிசை நோக்கிப் பிரயாணஞ் செய்யத் தொடங்கினர். அங்குள்ள முனிவர்களனைவரும் பலபல வண்டிகளில் அவரைப் பின்தொடர்ந்து சென்றனர். இங்ஙனம் மஹரிஷிகளனைவரும் ராம லக்ஷ்மணர்களும் புறப்பட்டு வெகு தூரம் நடந்துசென்று சோணநதத்தின் கரையில் உட்கார்ந்தபின் விசுவாமித்திரர் அத்தேசத்தின் வரலாறு கூறத்தொடங்கினர்;*

*“குழந்தாய்! பிரமனது மானஸபுத்ரனான குசனென்பவன் வைதர்ப்பி யென்னும் தனது பத்தினியிடத்தில் குசாம்பன், குசநாபன், ஆதூர்த்தரஜஸ், வஸு என்னும் நான்கு புதல்வர்களைப் பெற்றனன். அவர்களில் குசாம்பன் கௌசாம்பி யென்னும் பட்டணத்தையும், குசநாபன் மஹோதயமென்னும் பட்டணத்தையும், ஆதூர்த்தரஜஸ்ஸென்பவன் தர்மாரண்யமென்னும் பட்டணத்தையும், வஸுவென்பவன் கிரிவ்ரஜமென்னும் பட்டணத்தையும் படைத்தனர்; ராமா ! இச்சோணநதத்தின் கரையிலுள்ள பூமியானது வஸுவென்னும் அவ்வரசனுடையது. இப்பூமியைச் சுற்றி நாற்புறமும் ஐந்து பெரு மலைகள் இதோ விளங்குகின்றன. ஆனதுபற்றி இந்நகரம் கிரிவ்ரஜ மென்று வழங்கி வருகின்றது. இச்சோணநதம் மகததேசத்தின் வழியாகப் பெருகி வருவதுபற்றி மாகதீநதி யென்றும் வழங்கப்படும்.*

*ரகுநந்தனா! குசநாபனென்பவன் க்ருதாசி யென்னும் அப்ஸரஸ்திரீயினிடத்தில் நூறு பெண்களைப் பெற்றனன். அப்பெண்கள் நன்கு யௌவனம்வரப்பெற்று மேலான ஆடையாபரணங்களால் அலங்கரித்துக்கொண்டு நந்தவனத்திற்கு வந்து அங்குப் பலவிதமாக*

விளையாடிக்கொண்டிருக்க, அம்மாதரசிகளை வாயுதேவன் கண்டு மோஹங்கொண்டு "நீங்கள் எனக்கு மனைவிகளாகவேண்டும்; மனிதர்களுக்குத் தேவதைகளோடு தொடர்பு எப்படி நேருமென்று ஐயுறவேண்டுவதில்லை. நீங்கள் மனுஷ்யத் தன்மையைவிட்டு ஆயுள் நிரம்பப் பெறுவீர்கள். என்னை மணம் புரிவீர்களாயின் அழிவில்லாத யௌவனம் பெற்றுத் தேவ மாதரைப் போல் விளங்கி வாழ்வீர்கள்" என்று மொழிந்தனன். பிறகு அப்பெண்மணிகள் வாயுதேவனை நோக்கி "தேவோத்தமா! உனக்குள்ள பெருமையை நாங்கள் அறிவோம்; எங்களை நீ ஏன் அவமதிக்கின்றனை? நாங்கள் அனைவரும் குசநாபனுடைய பெண்கள். உனக்கு இந்த மதிகேடு ஏன் உண்டாயிற்றோ? இதை எங்கள் தகப்பனாராகிய குசநாபர் அறிவாராயின், உனக்குப் பெருங்கேடு வரக்கூடுமே; உலகத்தில் பெண்களைத் தகப்பன் கொடுப்பதன்றோ தருமம். அப்படியே எம் தகப்பனாராகிய குசநாபர் எங்களை எவனுக்கு விவாஹம் செய்து கொடுப்பாரோ, அவனையே கணவனாகப்பெற நாங்கள் உரியவர்களா யிருக்கின்றோம். அவரது அனுமதியின்றி எங்களை நீ விரும்புவது பிசகு" என்றனர். வாயு தேவனும் அதுகேட்டு வெகுண்டு அவர்களுடைய சரீரமெங்கும் புகுந்து உடலை முறித்துக் கூனிகளாகச் செய்துவிட்டனன். கூனிகளான அக்கன்னிகைகளும் தங்கள் தகப்பனிடம் சென்று சரீர விகாரத்தைப்பற்றி மிகவும் வெட்கிக் கண்ணுங் கண்ணீருமாகி நின்றனர். குசநாபனும் அப்பெண்கள் அவ்விதமாகச் சரீர விகாரமுற்று வருந்துவதைக்கண்டு மிகவும் மனங்கொதித்து, செய்தியை அவர்கள் வாயினால் நன்கறிந்து அவர்களின் குணத்திற்கு மிகவும் உவந்து வியந்து அவர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டு அப்பெண்மணிகளின் விவாஹத்தைக் குறித்து மந்திரிகளோடுகூடி ஆலோசித்தனன்.

[குசநாபபுத்திரிகளுக்கு விவாஹம் நடந்ததை விசுவாமித்திரர் இராமனுக்குக் கூறுதல்.]

ராமா! அக்காலத்தில் சூளியென்னும் ஓர் ப்ரமசாரி தவஞ் செய்துகொண்டிருந்தனர். அப்பொழுது ஊர்மிளையென்னும் அப்ஸரஸ்திரீயின் பெண்ணாகிய ஸோமதை யென்னும் ஒரு கந்தருவப்பெண் அவ்விடம் வந்து அம்மாமுனிக்குப் பணிவிடைசெய்து கொண்டிருந் தனள். அவள் ஒருநாள் அம்முனிவரை நோக்கி 'உமது தபோமகிமையைக்கொண்டு எனக்கு ஓர் புதல்வனைத் தரவேண்டும்' என்றனள். அவரும் அவளிடத்தில் அனுக்கிரகஞ் செய்து தன்மனத்தினின்றும் பிறந்த பிரஹ்மதத்தனென்னும் ஓர் உயர்ந்த புதல்வனை அவளுக் குத் தந்தனர். அந்தக் கந்தருவியும் க்ஷத்ரிய ஜாதியானதுபற்றி அவள் பிள்ளையாகிய அந்த பிரஹ்மதத்தனும் அரசனாயினன். குசநாபன் தனது பெண்களின் விவாஹத்தைக் குறித்து ஆலோசனை செய்கிற அச்சமயத்தில் அந்த பிரஹ்மதத்தன் காம்பில்யா நகரத்தில் அரசு செய்துகொண்டிருந்தனன். குசநாபன் அவனுக்குத் தனது புதல்விகள் நூறு பெயரை யும் கொடுக்க நிச்சயித்து அவனை வரவழைத்து அப்படியே விவாஹஞ்செய்து கொடுத்தனன். அம் மாதர்களைப் பாணிக்ரஹணஞ் செய்துகொண்டபொழுதே அக்கன்னிகைகள் நூறு பெயர்களும் கூன் நிமிர்ந்து அழகிய வடிவங்கொண்டு மிகவும் மகிழ்ந்தனர்.

[விசுவாமித்திரன் தான் குசநாபனுடைய பேரனென்று சொல்லி அக்கதையை முடித்தல்.]

ப்ரஹ்மதத்தன் மணம் புரிந்து தன் பட்டணத்திற்குச் சென்றபின் குசநாபன் மகப் பேறு விரும்பிப் புத்ரகாமேஷ்டி செய்தனன். பின்பு சில காலம் செல்ல, அக்குசநாபனுக் குக் காதியென்னும் ஓர் குமாரன் க்ருதாசியென்னும் அப்ஸரஸ் ஸ்திரீயினிடத்தில் ஜனித் தனன். ராமா! அக்காதியே எனக்குத் தகப்பனார். குசவம்சத்திற் பிறந்தேனாகையால் என்னைக் கௌசிகனென்பர்கள். என்னுடன் பிறந்தவள் ஸத்யவதியென்னும் ஒருத்தி

யுண்டு. அவள் எனக்கு முன் பிறந்தவள். அவள் தனது மணாளனுக்குச் செய்த உயர்ந்த பணிவிடையின் மேன்மையால் சரீரத்துடனே ஸ்வர்க்கமேறச் சென்றனள். அன்றியும் அவள் இப்பூமியில் கௌசிகியென்னும் ஓர் மஹா நதியாகவும் தோன்றி ஸ்வர்க்கத்திலிருந்து இமயமலையினருகில் பெருகி வருகின்றனள். நானும் நேசத்தினால் அம்மலைச் சாரலில்தானே எப்பொழுதும் வசித்திருக்கின்றேன். நான் யாகரியமத்திலன்றி அக்கௌசிகி நதியை விட்டு ஸித்தாச்ரமத்திற்கு வந்து உனது பேருதவியினால் ஸித்தியை யடைந்தவனாயினேன். ராமா! உன்மீதுள்ள அன்புமிகுதிபற்றி இங்ஙனம் எனது பிறப்பு முதலியவற்றைத் தெரிவித்தேன். நீ என்னைக் கேட்ட இத்தேசத்தினது வரலாற்றையும் மொழிந்தேன். அதிக நாழிகையாய்விட்டது. இனிக் கண்வளருவாயாக. விழித்துக்கொண்டிருந்தோமாயின் இனி வழி நடைக்கு அசக்தி நேரிடும்" என்றனர். பிறகு யாவரும் கண்ணயர்ந்தனர்.

[விசுவாமித்திரர் இராமனுக்குக் கங்கையின் வரலாறு கூறத்தொடங்கி, பார்வதீ பரமேச்வரர்களின் புணர்ச்சி, பார்வதி தேவர்களையும் பூமியையும் குறித்துச் சாபமிட்டது, குமரக் கடவுள் தோன்றியது முதலியன கூறுதல்.

எழுந்தபின் புறப்பட்டு வழியில் பலவிதமான வளங்களைப் பார்த்துக்கொண்டே சென்று கங்கையைக் கண்டனராக, அக் கங்கை மூன்று பிரிவாகப் பிரிந்த வரலாற்றை விசுவாமித்திரர் சொல்லத் தொடங்கினர்;—

"ராமா! ஹிமாலயமென்னும் பர்வத ராஜனுக்கு மனோரமையென்னும் மனைவியிடத்தில் கங்கையென்றும் உமையென்றும் இரண்டு பெண்கள் உண்டாயினர். தேவர்களனைவரும் ஒரு காரியத்தின் பொருட்டு இமவானிடம் சென்று கங்கையைக்கொடுக்கும்படி வேண்டிக்கொண்டனர். இமவானும் இரப்போர் கேட்டதை மறுக்கவொண்ணாதென்று தனது மகளாகிய கங்கையைத் தேவர்களுக்கு ஈந்தனன். அவள் உலகங்களனைத்தையும் பரிசுத்தமாக்குந் தன்மையள். தான் நினைத்தபடி எவ்வழியிலும் ப்ரவாஹங் கொள்ள வல்லவள். அவளைத் தேவர்கள் மற்றைய உலகங்களுக்கெல்லாம் நன்மையைச் செய்யும் பொருட்டு இமவானிடமிருந்து அழைத்துக்கொண்டு, தமது இஷ்டம் நிறைவேறியதால் மனக்களிப்புடன் சென்றனர். அக் கங்கை முதலில் தேவர்களின் விருப்பப்படி ஆகாய மார்க்கத்தில் சென்றனள். பின்பு தேவலோகத்திற் சென்று தேவநதியென்னும் பெயர் பெற்றனள். அந்த இமவானுடைய மற்றொரு பெண்ணாகிய உமையவள் சிவனைக் குறித்துத் தவம் செய்து அப்பெருமானை மணம்புரிந்தனள்.

சிவபிரான் தபோநிஷ்டனாயிருந்தும் மனமயங்கி உமையவளோடு கலவிசெய்யத் தொடங்கித் தேவமானத்தினால் நூறாண்டுகள் கடந்து செல்ல, ஒருநாள் நான்முகன் முதலிய வானவர்களனைவரும் அச்சிவபிரானிடம் வந்து வணங்கி 'மஹா தேவனே! நீர் உலகங்களுக்கு நன்மையே செய்யும் தன்மையுடையவராகையால் வணங்கி வேண்டிக்கொள்கிற எங்கள் மீது நீர் அருள்புரியவேண்டும். உமது வீர்யத்தினால் பிறக்கும் புதல்வனை உலகங்கள் தரிக்க மாட்டாவாகையால் நீர் இச்செயலை விட்டுவிடவேண்டும். மூவுலகங்கட்கும் நன்மையுண்டாகும்பொருட்டு உமது வீரியத்தை உமது தேஜோமயமான சரீரத்திலேயே அடக்கிக் கொள்ளவேண்டும், வெளி விடவேண்டாம். தயை புரிந்து இவ்வுலகங்களனைத்தையும் காப்பீராக' என்று இரந்தனர். சிவபெருமானும் அப்படியேயென்று இசைந்து, "தேவர்களே! நான் என்னுடைய வீரியத்தை உடலுக்குள்ளேயே அடக்கிக் கொள்ளுவேன், ஆனால்

# புதுடில்லியில் உபந்யாஸங்கள்

தென்னாட்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் உத்யோக நிமித்தமாகப் பலர் புது டில்லியில் வாழ்கின்றவர்கள் அவ்விடத்தில் ஸ்ரீ வைஷ்ணவ மஹா ஸங்க மொன்று ஸ்தாபித்திருப்பது பெரும்பாலும் உலகமறிந்ததே. அதில் அப்போதைக்கப்போது பண்டிதர்களைக் கொண்டு உபந்யாஸங்கள் நடத்தி வைப்பது வழக்கம். இந்த முறையில் ஸ்ரீ காஞ்சீ. உ. வே. P. B. அண்ணங்கராசாரியர் ஸ்வாமிகளை வரவழைத்து அவருடைய பல உபந்யாஸங்களை இந்த ஸபையின் சார்பாக நடத்தி வைக்க வேணுமென்று நெடுநாளாகப் பல பெரியார்களுக்கு விருப்பமிருந்தது. அது நிறைவேறும் பாக்யம் இப்போதே வாய்த்தது. ஸ்ரீ ஸ்வாமிகள் 25-11-48 காலை மதுரா ப்ருந்தாவனத்திலிருந்து புது டில்லிக்கெழுந்தருளி அங்கு 29-11-48 வரை 5 நாள் அற்புதமான அமுத மொழிகளை வர்ஷித்தார்கள். ஸ்ரீ ராமாயண ஸாரம், கீதாஸாரம், திவ்யப்ரபந்தஸாரம் என்னுமிவ்விஷயங்கள் அருமை பெருமை பொலிய ஸ்ரீ ஸ்வாமியால் அம்ருத தாரையே வடிவெடுத்ததாக அருளிச் செய்யப்பட்டன. Sri, S. வரதாசாரியர் ஸ்வாமி, C. V. ராஜன் போன்ற பல பல மஹான்கள் வெகு குதூஹலத்துடன் ஸபையை அலங்கரித்து உபந்யாஸ வமுத வெள்ளத்தில் ஆழ்ந்து பரிமானந்தமடைந்தார்கள். கடைசி நாள் உபந்யாஸ முடிவில் Sri, S. வரதாசாரியாரவர்கள் எழுந்து 35 வருஷகாலமாக ஸ்ரீ ஸ்வாமியின் பெருமைகள் தமக்குத் தெரியுமென்று எடுத்துக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமியின் பல பெருமைகளை வெகு இனிமையாக வெளியிட்டு அனைவரையும் பக்தி பரவசர்களாக்கினர். இப்படி இங்கு வருஷந்தோறும் எழுந்தருளி உபந்யாஸங்களை வர்ஷிக்கவேணுமென்று ஸபையாரனைவரும் ஏகமனதாக வேண்டிக்கொள்ள, ஸபை இனிது முடிவுபெற்று ஸ்ரீ ஸ்வாமியும் உடனே புறப்பட்டு கான்பூர், அலஹாபாத், காசி முதலான விடங்களை நோக்கி யெழுந்தருளியாயிற்று.

இங்ஙனம்,

புதுடில்லி )
30-11-1948 )

ஷை ஸபையின் நிர்வாஹிகளில் ஒருவனான

V. S. R. சக்ரவர்த்தி.

---

## சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபாவில் இவ்வருஷத்தில் லைப் மெம்பர் பதவியை ஏற்றுக்கொண்ட மஹநீயர்கள்

**(மூன்றாவது ஸஞ்சிகையின் தொடர்ச்சி)**

6 ஸீனி. ப. திருவேங்கடத்தய்யங்கார், ஸன்னிதிவீதி, ஆழ்வார்திருநகரி.

7 K. P. R. ஸீதைஜானகி ,, ,,

**ஷை ஸபாவுக்கு இரண்டாவது வருஷச் சந்தா (12—0—0) வரவுகள்**

8 K. S. லக்ஷ்மீநாராயண செட்டியார், ஈரோடு.

9 A. ராமஸ்வாமி அய்யங்கார் ஸிகந்ராபாட் (டெக்கான்)

10 A. K. சடகோபன் அவர்கள், பம்பாய்

11 ஸ்ரீமத்பரமஹம்ஸ எம்பெருமானார் ஜீயர் மடம். ஆழ்வார் திருநகரி

12 ராவ்ஸாஹிப். N. C. ரங்கஸ்வாமி ஐயங்கார் அஸிஸ்டென்ட் செகரெடரி S. P C. A. வேப்பேரி.

13 N. ஸ்ரீனிவாசாசாரியார் அட்வகேட் சைடாபெட் வேலூர்

## ஸ்ரீ ராமாநுஜன் பத்திரிகைக்காக 4—0—0 சந்தா வரவுகள்

22 P. B. அனந்தாசாரியர், திருக்கோட்டியூர்.
23 T. N. திருவேங்கடம் 31, பிராட்வே மதராஸ்
24 கோமடம், மு. ஸ்ரீராமாநுஜாசாரியர், திருக்கோட்டியூர்
25 K. P. நாராயணசாமிப்பிள்ளை மிராசுதார் ஈரோடு
26. A. ரங்காசாரியார், முத்துப்பட்டணம் காரைக்குடி.
27 P. T. ராமஸ்வாமி ஐயங்கார், நீடாமங்கலம்.
28 ம. சே[illegible]ாலேயங்கார். அனுமார் கோவில் பரமக்குடி

Edited Printed & Published by S. R. Varadarajan, B, A., for
Madras Sathgrantha Prakasana Sabha, at Sri Lakshmi Printing Works,
Car Street, Salem. Editor: P. B. Annangaracharya Swami.